مترجم باللغة التاميلية
தமிழ் மொழிபெயர்ப்பு

لا يجوز بيعه

# هذا هو الإسلام
# இது தான் இஸ்லாம்

உன் இறைவன் யார்?

உன் மார்க்கம் எது?

உன் நபி யார்?

விளக்கம் அளித்தவர்:
அஷ்ஷெய்க் ஹைஸம் இப்னு முஹம்மத் ஜெமீல் ஸர்ஹான்

شرح:
الشيخ هيثم بن محمد جميل سرحان

* அதே போன்று இந்த மூல நூலையும், அது உள்ளடக்கியுள்ள சந்தேகத்திற்கிடமில்லாமல் உறுதியாக நம்பவேண்டிய அடிப்படைகளையும் கற்பது பொதுமக்களுக்கும் இன்றியமையாததாகும்.



* அதே போன்று இந்த மூல நூலையும், அது உள்ளடக்கியுள்ள சந்தேகத்திற்கிடமில்லாமல் உறுதியாக நம்பவேண்டிய அடிப்படைகளையும் கற்பது பொதுமக்களுக்கும் இன்றியமையாததாகும்.



## இம்மூன்று அடிப்படைகளை கற்றுக்கொள்வதால் நாம் பெறப்போகும் பயன் தான் என்ன?

மூன்று அடிப்படைகளையும் கற்று, பின்னர் அவற்றை செயல்படுத்தி, பின்னர் அவற்றின் பக்கம் மற்றவர்களையும் அழைத்து, மற்றும் கற்றல், செயல்படுத்தல், அழைத்தல் ஆகிய விடயங்களில் பொறுமையும் கடைபிடித்தால் மண்ணறையில் கேட்கப்படும் வினாக்களுக்கு அல்லாஹ்வின் உதவியால் பதிலளித்துவிடுவீர்.



## மூன்று அடிப்படைகள் என்ற மூல நூலின் பொருள் அட்டவணை

இம்மூலத்தை ஐந்து பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை:






## 1. நான்கு அம்சங்கள்




## 2. மூன்று அம்சங்கள்




## 3. தவ்ஹீதை கற்பதன் அவசியம்

நாம் ஏன் தவ்ஹீதை படிக்கவேண்டும்? என்ற கேள்விக்கு பதில்

## 4. மூன்று அடிப்படைகள்

மூன்று அடிப்படைகள் என்பவை சுருக்கமாக: மண்ணறையில் வினவப்படும் மூன்று கேள்விகள்




## 5. முடிவுரை

"மனிதர்கள் மரணித்தால் எழுப்பப்படுவார்கள்" என்ற ஆசிரியரின் கூற்றில் ஆரம்பித்து மூல நூலின் முடிவு வரை.

# முதலாவது: நான்கு அம்சங்கள்

*பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்.*(1)

(1) நூலாசிரியர் மூலத்தை அல்லாஹ்வின் பெயர் கொண்டு ஆரம்பித்ததற்கான காரணம்:

1. அல்லாஹ்வின் வேதத்தையும் நபிமார்களையும் عَلَيْهِمُ السَّلَامُ பின்பற்றும் நோக்கம்.

2. அல்லாஹ்வின் பெயர் கொண்டு தங்கள் நூற்களை ஆரம்பிக்கும் வழமையை கொண்டிருந்த அவருக்கு முன் வாழ்ந்த அறிஞர்களையும் ஸலப்களையும் பின்தொடர்வதற்காக.

3. அல்லாஹ்வின் சங்கைமிக்க பெயரைக் கொண்டு பரகத் பெற்றுக்கொள்வதற்காக.

அறிந்துகொள் –அல்லாஹ் உனக்கு அருள்புரிவானாக! (2)- : நான்கு அம்சங்களை கற்றுக்கொள்வது உன் மீது கட்டாயமாகும்:

(2) முன்னுரையில் நாம் சுட்டிக்காட்டியது போன்று அறிவைத் தேடும் மாணவர்களுக்கு அல்லாஹ்விடம் அருளை வேண்டி பிரார்த்தித்து, ஆரம்பிப்பது நூலாசிரியரின் வழமையாகும். இது பின்வரும் விடயங்களை எடுத்துக்காட்டுகிறது:

அஹ்லுஸ் ஸுன்னஹ் வல்ஜமாஆத்தைச் சேர்ந்த எமது உலமாக்கள் தமது மாணவர்களுக்குக் காட்டும் கருணை.

அடிப்படையில் இஸ்லாம் மார்க்கம் கருணையின் மீது கட்டி எழுப்பப்பட்டுள்ளது.

முதலாவது: கல்வி அறிவு(3). அதாவது: ஆதாரங்களுடன் அல்லாஹ்வையும், அவனது நபி ﷺ அவர்களையும், இஸ்லாம் மார்க்கத்தையும் அறிதல்.

(3) அறிதல் என்பது: உண்மையை அதன் ஆதாரத்துடன் தெரிந்துகொள்ளல். அதன் எதிர்ப்பதம் மடமை (அறியாமை).

**இரண்டாவது: அதை செயலில் வெளிப்படுத்தல்(1).**

(1) இல்ம்-அறிவுக்கும் அமலுக்கும் இடையிலுள்ள தொடர்பு பின்வருமாறு தெளிவுபடுத்தப்பட்டுள்ளது: "இல்ம் அமலை அழைக்கும், அமல் அதற்கு பதிலளித்தால் இல்ம் நிலைக்கும். அமல் பதிலளிக்காவிட்டால் இல்ம் சென்றுவிடும்".
எனவே, அமலுடன் ஒன்றித்திருக்காத இல்மில் எந்தப் பயனுமில்லை. கற்றதை அமல்செய்வது கற்றவன் மீது கட்டாயமாகும். இல்லாத விடத்து அவனிடம் யூதர்களுக்கு ஒப்பாகும் ஒரு பண்பு இருக்கிறது; ஏனெனில் யூதர்களிடம் இல்ம் இருக்கும், அமல் இருக்காது. {எவர்களுக்கு நாம் வேதம் கொடுத்திருக்கின்றோமோ அவர்கள் தம் புதல்வர்களை அறிவது போல் அதை(சத்தியத்தை) அறிவார்கள்} [2:146]. முதலில் மூவரைக் கொண்டே நரகம் எரிக்கப்படும். அவர்களில் அறிவைக் கற்று அதை செயல்படுத்தாத (மார்க்க) அறிஞரும் ஒருவர்.
தன் அறிவை செயல்படுத்தாத அறிஞர் விக்கிரக வணங்கிகளுக்கும் முன்னராகவே வேதனை செய்யப்படுவார்.

**மூன்றாவது: அதன் பக்கம் அழைப்பது(2).**

(2) தஃவஹ் (அழைப்புப்) பணியில் அவசியமாகப் பேணப்பட வேண்டிய நிபந்தனைகளும் வரையறைகளும் உள்ளன. அவற்றில் முக்கியமானவை:

1. அல்லாஹ்விற்காக மாத்திரம் தூய்மையானதாக இருத்தல்
2. மார்க்க அறிவின் அடிப்படையில் அமையப்பெறுதல்
3. ஹிக்மஹ், பொறுமை ஆகியவை தஃவஹ்வில் பேணப்படல்
4. அழைக்கப்படும் மக்களின் நிலைமைகளை கவனத்தில் கொள்ளல்

## இந்த நிபந்தனைகளின் ஆதாரம்

அல்லாஹுத் தஆலாவின் கூற்று: **{(நபியே) நீர் சொல்வீராக! "இதுவே என்னுடைய வழியாகும்; நான் அல்லாஹ்வின் பால் அழைக்கின்றேன்; தெளிவான ஞானத்தின் மீதே நானும் என்னைப் பின்பற்றியவர்களும் இருக்கின்றோம்".}** [12:108]

**{(நபியே) நீர் சொல்வீராக! "இதுவே என்னுடைய வழியாகும்.}**: இதுவே என்பது தூதர்ﷺ அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தை குறிக்கும். வழி என்பது: பாதை.

**{நான் அல்லாஹ்வின் பால் அழைக்கின்றேன்.}**: அல்லாஹ்வின் பால் அழைப்பவர் என்றால் மனிதர்களை அல்லாஹ்வின் பக்கம் மட்டுமே கொண்டு செல்ல விரும்புகின்ற (உள்நோக்கங்களற்ற) உளத் தூய்மையானவர்.

**{தெளிவான ஞானத்தின் மீதே}**: "பஸீறஹ்" (தெளிவான ஞானம்) என்பது அறிவைக் குறிக்கும். இங்கு அறிவு என்பது கீழ்வருவனவற்றை உள்ளடக்கும்:




நூலாசிரியர் رَحِمَهُ ٱللَّهُ பின்வருமாறு சொல்லவருகிறார் போல் இருக்கிறது: நீ கற்றுக்கொண்டு, பின்னர் செயல்படுத்தினால், (அதைத் தொடர்ந்து) நபிﷺ அவர்களும் சஹாபாக்களும் சிறந்த முன்னோர்களும் இருந்த வழியில் நீ பயணிக்க வேண்டியது உன் மீது கடமை; ஏனெனில், அல்லாஹ் கூறுகிறான்: **{(நபியே) நீர் சொல்வீராக ! "இதுவே என்னுடைய வழியாகும்; நான் அல்லாஹ்வின் பால் அழைக்கின்றேன்; தெளிவான ஞானத்தின் மீதே நானும் என்னைப் பின்பற்றியவர்களும் இருக்கின்றோம்.}**, எனவே, அழைப்புப் பணி செய்வதும் கட்டாயமாகும்.

நான்காவது: அவற்றிலுள்ள இடையூறுகள் விடயத்தில் பொறுமையாக இருப்பது(1).

(1) நூலாசிரியர்رَحِمَهُٱللَّهُ தஃவஹ்விற்கு பின்னர் பொறுமையை குறிப்பிட்டுள்ளார். அவர் பின்வருமாறு சொல்ல வருகிறார் போலும்: நிச்சயமாக இப்பாதையில் செல்பவருக்கு நபிமார்களுக்கும் தூதர்களுக்கும் عَلَيْهِمُٱلسَّلَامُ ஏற்பட்டது போன்று சில (சிரமமான) விடயங்கள் ஏற்படும். எனவே, பொறுமை செய்வது அவசியம்.



ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்று:

**1- காலத்தின் மீது சத்தியமாக . 2- நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கின்றான். 3- ஆயினும், எவர்கள் நம்பிக்கை கொண்டு, நற்செயல்களையும் செய்து, சத்தியத்தை ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து, பொறுமையை கடைபிடிக்குமாறும் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து வந்தார்களோ, அவர்களைத் தவிர. (அதாவது, அத்தகையோர் நஷ்டமடையவில்லை)**(1). [ஸூரதுல் அஸ்ர்]

(1) நூலாசிரியர் رَحِمَهُ ٱللَّهُ நான்கு அம்சங்களையும் குறிப்பிட்ட பிறகு அவற்றுக்கான ஆதாரத்தை கொண்டுவந்துள்ளார்; அது தான் அல்-அஸ்ர் அத்தியாயம். நூலாசிரியர் எப்போதும் ஆதாரத்துடன் சேர்த்தே கருத்துக்களை குறிப்பிடுவார். அதற்கான காரணம் யாது?

**1-**தக்லீது செய்யாமல் (ஆதாரத்துடன்) பின்பற்றுவதற்கு மாணவனைப் பயிற்றுவித்தல்.

**2-**மாற்றுக்கருத்துள்ளவர்களுக்கு பதிலளிப்பதற்கான ஆதாரம் மாணவனிடம் இருக்க வேண்டும்.

**3-**சரியான அடிப்படைகளை பயன்படுத்தி சட்டங்களை அதற்குரிய ஆதாரங்களில் இருந்து துல்லியமாக வெளிக்கொண்டு வருவதற்கான ஆற்றல் மாணவனிடம் இருக்க வேண்டுமென்பதற்காக.

ஷாபிஈ ﷺ கூறுகிறார்: "அல்லாஹ் தன் படைப்புகளுக்கு இந்த ஸூராவைத் தவிர வேறு எந்த ஆதாரத்தையும் இறக்கியருளாது இருந்தால் கூட இதுவே அவர்களுக்கு போதுமானதாக ஆகியிருக்கும்"(1).

(1) இமாம் ஷாபிஈ رَحِمَهُ اللهُ நாடுவது யாதெனில்: படைக்கப்பட்டவர்கள் (ஆகிய நாம்) கற்று, செயல்படுத்தி, பிரச்சாரம் செய்து, பொறுமையும் செய்ய வேண்டும் என்பதற்கு இந்த ஸூரா மாத்திரமே ஆதாரமாக அமைந்திருக்க போதுமானது. என்றாலும், குர்ஆன் முழுவதிலும் இதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

புகாரீ رَحِمَهُ اللهُ கூறுகிறார்: "சொல்லுக்கும், செயலுக்கும் முன்னர் அறிவை பெறல் என்ற பாடம்".
அதற்கான அதாரம் (பின்வரும்) அல்லாஹுத் தஆலாவின் கூற்றாகும்: {ஆகவே, (நபியே!) நிச்சயமாக அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவரும் இல்லை என்று நன்கு அறிந்துகொள்ளும். மேலும், உம் பிழைகளுக்காகவும் இறைநம்பிக்கைகொண்ட ஆண்கள், பெண்களுக்காகவும் மன்னிப்புக் கேளும்!} [47:19]
அல்லாஹ் சொல்லுக்கும் செயலுக்கும் முன்னால் அறிவைக் கொண்டு ஆரம்பித்துள்ளான்(2).

(2) ஹதீஸ் துறையில் முஃமின்களின் தலைவர் தனது நூலான ஸஹீஹுல் புகாரியில் "சொல்லுக்கும், செயலுக்கும் முன்னர் அறிவை பெறல் என்ற பாடம்" என தலைப்பிட்டுள்ளார். அதன் ஆதாரத்தையும் குறிப்பிட்டுள்ளார். எனவே, சொல்லுவதற்கும் செயல்படுத்துவதற்கும் முன்னரே ஆரம்பமாகக் கற்றுக்கொள்வது அவசியமாகும்.
ஆகவே, அறிவின்றி அமல் செய்வது கூடாது, அவ்வாறு செய்பவர் நஸாராக்களுக்கு ஒப்பாகின்றார்.

# இரண்டாவது: மூன்று அம்சங்கள்

அறிந்து கொள் -அல்லாஹ் உனக்கு அருள் புரியட்டும்- இம் மூன்று அம்சங்களையும் கற்று அவற்றைச் செயல்படுத்துவது ஒவ்வொரு முஸ்லிமான ஆணின் மீதும் பெண்ணின் மீதும் கடமையாகும்(1):

(1) நூலாசிரியர் رَحِمَهُ اللَّهُ இப்பகுதியை மாணவனுக்குப் பிரார்த்திப்பதன் மூலம் ஆரம்பித்துள்ளார்.

நூலாசிரியர் மூன்று அடிப்படைகள் என்ற தனது இந்த நூலில் மூன்று இடங்களில் மாணவனுக்காக பிரார்த்தனை செய்துள்ளார். அவை:

1- நான்கு அம்சங்களை குறிப்பிட ஆரம்பித்த போது.

2- பின்னர் இம் மூன்று அம்சங்களை குறிப்பிடும்போது

3- மூன்றாவது இடம்: "அறிந்து கொள் -அல்லாஹ்விற்கு வழிப்படுவதற்கு அவன் உனக்கு வழி காட்டுவானாக-: இப்ராஹீம் நபியின் மார்க்கமான "ஹனீபிய்யஹ்" என்பது:" என்று பின்னர் வரக்கூடிய ஒரு இடத்தில் குறிப்பிடுகிறார்.

## மூன்று அம்சங்களை விளக்குவதற்கு முன் ஒரு முன்னுரை

### தவ்ஹீத் (ஏகத்துவம்)

**மொழி வழக்கில்:** "வஹ்ஹத-யுவஹ்ஹிது-தவ்ஹீதன்" என்ற சொற்களின் மூலச் சொல்லாகும். அது ஓர்மைப்படுத்தல் என்ற அர்த்தத்தை தரும். அரபியில் "வஹ்ஹததஷ் ஷெய்" என்றால் ஒரு பொருளை ஒன்றாக ஆக்குதல் என்பது அர்த்தம்.

**மார்க்க வழக்கில்:** ருபூபிய்யஹ், உலூஹிய்யஹ், அல் அஸ்மாஉ வஸ்ஸிஃபாத் ஆகிய விடயங்களில் அவன் தனித்துவமானவன் என அவனை ஓர்மைப் படுத்துதல்.

## தவ்ஹீத் மூன்று வகைப்படும்

தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்: அல்லாஹ்வை அவனது செயல்கள் விடயத்தில் ஓர்மைப்படுத்துதல். அதாவது படைத்தல், ஆட்சி செய்தல், திட்டமிடுதல் ஆகிய விடயங்களில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்தல்.

தவ்ஹீதுல் உலூஹிய்யஹ்: அல்லாஹ்வை வணக்க வழிபாட்டில் ஓர்மைப்படுத்தல்.

தவ்ஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிஃபாத்: அல்லாஹ் தன் வேதத்திலும் தன் நபி பேச்சிலும் தனக்கு சூட்டிக்கொண்ட பெயர்களிலும் தன்னை வர்ணித்துக் கொண்ட பண்புகளிலும் அவனை ஓர்மைப் படுத்துதல் .

அதாவது அவனின் பெயர்களிலும் பண்புகளிலும் மாற்றம் செய்யாது, கருத்தை மறுக்காது, இவ்வாறு என்று கற்பனை செய்யாது, உவமானம் கூறாது அவன் தனக்கு இருப்பதாகக் குறிப்பிட்டதை இருப்பதாகவும் தனக்கு இல்லை என்று குறிப்பிட்டதை இல்லை என்றும் நம்புதல்.

* அல்லாஹ்வின் பெயர்களும் பண்புகளும் "தவ்கீபிய்யஹ்" என்ற சட்ட வகையைச் சார்ந்தனவாகும். அதாவது, குர்ஆனிலும் ஸுன்னஹ்விலும் இடம்பெற்றிருக்கின்ற கருத்துக்களுடன் நிறுத்திக் கொள்ளப்பட வேண்டியவை.

- அல்லாஹ் தன்னுடைய வேதத்தில் தனக்கு இருப்பதாக குறிப்பிட்டுள்ள விடயங்களையும் மேலும், அவனுடைய தூதர் ﷺ அவர்கள் அவனுக்கு இருப்பதாக குறிப்பிட்டுள்ள விடயங்களையும் அவ்வாறே நம்ப வேண்டும்.

- அல்லாஹ் தனது வேதத்தில் தனக்கு இல்லை என்று குறிப்பிட்டுள்ள விடயங்களையும், அவனுடைய தூதர் ﷺ அவர்கள்

அவனுக்கு இல்லை என்று குறிப்பிட்டுள்ள விடயங்களையும் அவ்வாறே அவனுக்கு இல்லை என்று நம்ப வேண்டும். உதாரணம்: {அவனை சிறு உறக்கமோ தூக்கமோ பீடிக்காது} [2:255], {எங்களுக்கு எத்தகைய களைப்பும் ஏற்படவில்லை} [2:255] போன்ற குர்ஆன் வசனங்கள்.

- அப்பெயர்களையும் பண்புகளையும் திரிவுபடுத்தாமலும், கருத்தை மறுக்காமலும், எவ்வாறு என்று குறிப்பிடாமலும், உவமானம் கூறாமலும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

## மூன்று அம்சங்களின் சுருக்கம்




முதலாவது: அல்லாஹ் எங்களை படைத்தான், எங்களுக்கு வாழ்வாதாரம் அளித்தான், எங்களை பராமுகமாக விட்டுவிடாமல் எங்களுக்கு ஒரு தூதரையும் அனுப்பி வைத்தான். அத்தூதருக்கு கட்டுப்படக்கூடியவர் சுவனம் நுழைவார். அவருக்கு மாறு செய்யக் கூடியவர் நரகம் நுழைவார்.
ஆதாரம் அல்லாஹ்வின் (பின்வரும்) கூற்று:
{நிச்சயமாக ஃபிர்அவ்னிடம் ஒரு தூதரை நாம் அனுப்பியது போல், உங்களிடமும், உங்கள் மீது சாட்சி சொல்பவராகிய ஒரு தூதரை நாம் அனுப்பி வைத்தோம். எனினும் ஃபிர்அவ்ன்

அத்தூதருக்கு மாறு செய்தான்; எனவே, அவனைக் கடினமான பிடியாக, நாம் பிடித்துக் கொண்டோம்.} [73:15,16] (1).

(1) முதலாவது அம்சத்தில் நூலாசிரியர்رَحِمَهُ ٱللَّهُ தவ்ஹீதுர் ருபூபிய்யஹ் மற்றும் தவ்ஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிஃபாத்தை எடுத்துரைத்துள்ளார். **(அல்லாஹ் எங்களை படைத்தான்)**: அதாவது அவன் தான் படைப்பாளன். **(எங்களுக்கு வாழ்வாதாரம் அளித்தான்)**: அதாவது அவன் தான் ரிஸ்(z)க்-வாழ்வாதாரம் தருபவன். **(எங்களை பராமுகமாக விட்டுவிடாமல்)**: அதாவது ஏவல் விலக்கல்கள் இல்லாமல் எங்களை பால்படுத்தி விடவில்லை (; **எங்களுக்கு ஒரு தூதரையும் அனுப்பி வைத்தான்)**.

## அல்லாஹ் தூதர்களை அனுப்பி இருப்பதன் நோக்கம்

படைக்கப்பட்டவர்களுக்கு ஆதாரத்தை நிலைநாட்டுவதற்காக.
{(எமது) தூதரை அனுப்பாத வரையில் (எவரையும்) நாம் வேதனை செய்வதில்லை.} [17:15]

அருளாக.
{(நபியே!) உங்களை உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை.} [21:107]

இரண்டாவது: அல்லாஹ்வை வணங்கும் விடயத்தில் தன்னுடன் எவரும் இணையாக்க படுவதை அவன் பொருந்திக் கொள்ள மாட்டான். அப்படிப்பட்டவர் தனக்கு நெருக்கமான ஒரு வானவராக அல்லது தன்னால் அனுப்பப்பட்ட ஒரு நபியாக கூட இருக்கலாம். ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்.

{நிச்சயமாக மஸ்ஜித்கள் அல்லாஹ்வுக்காகவே இருக்கின்றன, எனவே, அவற்றில் அல்லாஹ்வுடன் (சேர்த்து வேறு) எவரையும் நீங்கள் பிரார்த்திக்காதீர்கள்} [72:18]

இரண்டாவது அம்சத்தில் உலூஹிய்யஹ் அல்லாஹ்வுக்குரியது என நிலைநாட்டப்பட்டுள்ளது.

நூலாசிரியர்ﷺ கூறுகிறார்: "நிச்சயமாக அல்லாஹ் தன்னுடன் எவரும் இணைவைக்கப்படுவதை பொருந்திக் கொள்ள மாட்டான்". "எவரும்" என்ற சொல் நபீ, வலீ, ஜின், வானவர், நல்லவர், கெட்டவர் ஆகிய அனைவரையும் உள்ளடக்கும். அதற்கான ஆதாரத்தையும் குறிப்பிட்டுள்ளார். அதில் {எவரையும் பிரார்த்திக்காதீர்} என்று பொதுவாகவே உள்ளது.

"மஸ்ஜித்கள்" என்ற சொல்லின் அர்த்தம் குறித்து மூன்று கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. அது அவை அனைத்தையும் உள்ளடக்குவதாக இருக்க முடியும்.

| | | |
|---|---|---|
| அல்லாஹ்வை வணங்குவதற்காக கட்டப்பட்ட வணக்கஸ்தலங்கள் | சுஜூதின் உறுப்புகள் | பூமி *((பூமி எனக்கு சுஜூது செய்யும் இடமாகவும் சுத்தம் செய்யத் தக்க இடமாகவும் ஆக்கப்பட்டுள்ளது))* என்று ஹதீஸில் உள்ளது |

மூன்றாவது: யார் தூதருக்கு வழிப்பட்டு, அல்லாஹ்வையும் ஓர்மைப்படுத்துகிறாரோ அவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் பகைப்பவர்களோடு நேசம் பாராட்டக்கூடாது. அப்படியானவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே. அதற்கான ஆதாரம் அல்லாஹ்வின் (பின்வரும்) கூற்றாகும்:

{அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பும் சமூகத்தினர், அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பகைத்துக் கொண்டவர்களை நேசிப்பவர்களாக (நபியே) நீர் காணமாட்டீர் . அவர்கள் தங்கள் பெற்றோராயினும் தங்கள் புதல்வர்களாயினும் தங்கள் சகோதரர்களாயினும் தங்கள் குடும்பத்தினராயினும் சரியே; (ஏனெனில்) அத்தகையவர்களின் இதயங்களில், (அல்லாஹ்) ஈமானை எழுதி(ப் பதித்து) விட்டான்; மேலும் அவன் தன்னிடமிருந்து (அருள் என்னும்) ஆன்மாவைக் கொண்டு இவர்களைப் பலப்படுத்தியிருக்கிறான்; கீழே ஆறுகள் ஓடும் சுவர்க்கச் சோலைகளில் என்றென்றும் இருக்கும்படி அவர்களைப் பிரவேசிக்கச் செய்வான். அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொண்டான்; அவர்களும் அவனைப் பொருந்திக் கொண்டார்கள். அவர்கள்தாம் அல்லாஹ்வின் கட்சியினர்; அறிந்துகொள்க: நிச்சயமாக அல்லாஹ்வின் கட்சியினர் தாம் வெற்றி அடையக்கூடியவர்கள்.} [58:22]

மூன்றாவதாக நூலாசிரியர் رَحِمَهُ اللَّهُ இணைவைத்தல் மற்றும் இணை வைப்பவர்களிடமிருந்து நீங்கி தூரமாக இருப்பது கட்டாயம் என்பதை தெளிவுபடுத்தியுள்ளார்.

## இணைவைத்தல் மற்றும் இணை வைப்பவர்களிடமிருந்து நீங்குதல் என்பது மூன்று விதத்தில் ஏற்படும்




1- உள்ளத்தின் மூலம்: நிராகரிப்பாளர்களையும் அவர்களுடைய கொண்டாட்டங்களையும் வெறுத்தல், குறிப்பாக இணை வைக்கக் கூடிய விடயங்கள் மற்றும் அவர்களிடம் காணப்படும் நூதனமான செயல்களை வெறுக்க வேண்டும்.

2- நாவின் மூலம்: {நிச்சயமாக நீங்கள் வணங்குபவற்றிலிருந்து நான் நீங்கிவிட்டேன்} என்று இப்றாஹீம் –அலைஹிஸ்ஸலாம்- கூறியது போன்று.

{(நபியே) நீர் சொல்வீராக: காஃபிர்களே! நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்கமாட்டேன். நான் வணங்குகிறவனை நீங்கள் வணங்குகிறவர்களுமல்லர். அன்றியும், நீங்கள் வணங்கியவற்றை நான் வணங்குபவனல்லன். நான் வணங்குபவனை நீங்கள் வணங்குகிறவர்களுமல்லர். உங்களுக்கு உங்களுடைய மார்க்கம்; எனக்கு என்னுடைய மார்க்கம்.} [109:1-6]

3- உடல் உறுப்புக்கள் மூலம்: அவர்களுக்கு என்று இருக்கக்கூடிய கொண்டாட்டங்கள், கிரியைகள், ஆடைகள், அவர்களுடைய மத நம்பிக்கைகள் ஆகியவற்றில் கலந்து கொள்ளாது இருத்தல்.

# மூன்றாவது : ஏகத்துவத்தை கற்றுக் கொள்வதின் அவசியம்

அறிந்து கொள் -அல்லாஹ்வை வழிப்படுவதற்கு அவன் உனக்கு வழி காட்டுவானாக!-: இப்ராஹீம் நபியின் மார்க்கமான "ஹனீபிய்யஹ்" என்பது:
அல்லாஹ்வுக்கு நீ மார்க்கத்தை தூய்மைப்படுத்தி அவனை மாத்திரமே வணங்குவது.
அதையே அனைத்து மனிதர்களுக்கும் அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான். அதற்காகவே அவர்களை படைத்துள்ளான்.

## ஹனீபிய்யஹ்

மொழி ரீதியாக: "ஹனஃப்" என்ற சொல்லில் இருந்து எடுக்கப்பட்டுள்ளது. அதன் அர்த்தம்: சாய்தல்.

மார்க்க ரீதியாக: இணைவைத்தலில் இருந்து முழுமையாக (விலகி) சாய்ந்தும்; இஹ்லாஸ், ஏகத்துவம், ஈமான் ஆகியவற்றை முன்னோக்கியும் இருக்கும் மார்க்கத்தை குறிக்கும்.
{நிச்சயமாக இப்ராஹீம் ஒரு வழிகாட்டியாகவும், அல்லாஹ்வுக்கு அடிபணிந்தவராகவும், "ஹனீப்" ஆகவும் இருந்தார்.} [16:120]
அதாவது அல்லாஹ்வின் பக்கம் முன்னோக்கியவராக, இணைவைத்தலை புறம் தள்ளியவராக என்பது அர்த்தம். எனவே, "ஹனீப்" என்பது எப்போதும் ஏகத்துவத்தின் பக்கம் மீண்டு இணை வைப்பதிலிருந்து தூரமாகி இருப்பவனை குறிக்கும்.

அல்லாஹ் கூறுகிறான்: {மேலும், ஜின்களையும், மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்காகவேயன்றி நான் படைக்கவில்லை.} [51:56].

"என்னை வணங்குவதற்காக" என்பதன் அர்த்தம்: என்னை ஓர்மைப்படுத்துவதற்காக என்பதாகும்.

அல்லாஹ் கட்டளையிட்டவற்றில் மிகவும் வலுவானது-மகத்தானது ஏகத்துவமாகும். அது தான் அவனை வணக்கவழிபாடுகளில் ஓர்மைப்படுத்துவதாகும்(1).

அவன் தடுத்தவற்றில் மிக வலுவானது இணைவைத்தலாகும்.

அதுதான் அவனுடன் இன்னொருவரை பிரார்த்திப்பதாகும்.

(1) இங்கு நூலாசிரியர் رحمه الله ஏன் தவ்ஹீதைப் படிக்க வேண்டும் என்பதை விளக்கியுள்ளார். ஏற்கனவே, அதன் அவசியம் குறித்து பேசியுள்ளோம்.

## தவ்ஹீதின் வரைவிலக்கணம்

–முன்னுரையில் குறிப்பிட்டது போல்–

மொழி வழக்கில்: "வஹ்ஹத-யுவஹ்ஹிது-தவ்ஹீதன்" என்ற சொற்களின் மூலச் சொல்லாகும். அது ஓர்மைப் படுத்தல் என்ற அர்த்தத்தை தரும். அரபியில் "வஹ்ஹதஷ் ஷெய்" என்றால் ஒரு பொருளை ஒன்றாக ஆக்குதல் என்பது அர்த்தம்.

மார்க்க வழக்கில்: ருபூபிய்யஹ், உலூஹிய்யஹ், அல் அஸ்மா வஸ்ஸிஃபாத் ஆகிய விடயங்களில் அவன் தனித்துவமானவன் என அவனை ஒருமைப் படுத்துதல்.

"என்னை வணங்குவதற்காக" என்பதன் அர்த்தம்: என்னை ஓர்மைப் படுத்துவதற்காக என்பதாகும்" என நூலாசிரியர் கூறுகிறார்.

இது தான் இப்னு அப்பாஸ் -ரலியல்லாஹு அன்ஹுமா- அவர்களின் கருத்தாகும். "குர்ஆனில் இபாதஹ் என்று இடம்பெற்றுள்ள ஒவ்வொரு இடத்திலும் அதன் கருத்து தவ்ஹீத் என்பதே" என அவர் கூறியுள்ளார். {அல்லாஹ்வை வணங்குங்கள்} [4:36]: அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துங்கள். {மனிதர்களே! உங்களின் இறைவனை வணங்குங்கள்} [2:21]: மனிதர்களே! உங்களின் இறைவனை ஓர்மைப்படுத்துங்கள்.

# நான்காவது : மூன்று அடிப்படைகள்

மனிதன் கட்டாயமாக அறிய வேண்டிய மூன்று அடிப்படைகள் யாவை? என உன்னிடம் வினவப்பட்டால்,
அடியான் தனது ரப்[b]பையும், தனது மார்க்கத்தையும், தனது நபீ முஹம்மத்ﷺ அவர்களையும் அறிந்துகொள்ளல் என பதிலளிப்பீராக(1).

(1) நூலாசிரியர்رَحِمَهُ ٱللَّٰهُ மண்ணறையில் கேட்கப்படும் கேள்விகளான மூன்று அடிப்படைகளை குறிப்பிடுவதற்கு ஆரம்பித்துள்ளார்.
ஒரு கேள்வியின் மூலம் வாசகர் அல்லது செவிமடுப்பவரின் கவனத்தை ஈர்த்து, அதற்கு பதில் அளித்துள்ளார்.

உனது ரப்[b]பு (இறைவன்) யார்? என உன்னிடம் வினவப்பட்டால், என் ரப்[b]பு தான் என்னையும் உலகத்தார் அனைவரையும் தனது அருட்கொடைகளால் படைத்துப் பராமரிப்பவன்; அவன் எனது வணக்கத்திற்குரியவன். அவனைத் தவிர எவரையும்/எதையும் நான் வணங்குவதில்லை என்று கூறுவீராக. ஆதாரம் (பின்வரும்) அலாஹ்வின் கூற்று:

﴿ ٱلْحَمْدُ لِلَّهِ رَبِّ ٱلْعَٰلَمِينَ ﴾ {எல்லாப் புகழும் அகிலங்களின் ரப்[b]பான அல்லாஹ்வுக்கே.} [1:2] (2).

(2) நூலாசிரியர்رَحِمَهُ ٱللَّٰهُ முதல் அடிப்படையைத் தெளிவுபடுத்தியுள்ளார். (படைத்து பராமரித்து அதிகாரம் செலுத்துபவனாகிய) ரப்[b]பும் மேலும், வணக்கத்திற்கு தகுதியானவனும் அல்லாஹ்سُبْحَانَهُ وَتَعَالَىٰ தான் என்று விளக்கியுள்ளார். அதற்கான ஆதாரத்தையும் குறிப்பிட்டுள்ளார். அது தான் ﴿ ٱلْحَمْدُ لِلَّهِ رَبِّ ٱلْعَٰلَمِينَ ﴾ என்ற அல்லாஹ்வின் கூற்றாகும். எனவே, ரப்[b]பாக இருப்பவனே வணங்கப்பட வேண்டியவன்.

அல்லாஹ்வைத் தவிரவுள்ள அனைத்தும் அகிலம் (ஆலம்) என்ற சொல்லுக்குள் உள்ளடங்கிவிடும். அந்த அகிலத்தில் நானும் ஒருவன்(3).

(3) அதாவது அல்லாஹ் அல்லாத அனைத்தும் படைக்கப்பட்டதே. நான் படைக்கப்பட்டவனாக இருந்தால், அவசியம் (என்னை) படைத்து அருட்கொடைகளை வழங்கியவனுக்கு நன்றி செலுத்தவேண்டும்.

* ﴿ ٱلۡحَمۡدُ لِلَّهِ رَبِّ ﴾

{எல்லாப் புகழும் அகிலங்களின் ரப்[(b)]பான அல்லாஹ்வுக்கே.}

**இந்த வசனம் தவ்ஹீதின் மூன்று வகைகளையும் உள்ளடக்கியுள்ளது:**

| | | |
|---|---|---|
| ﴿ رَبِّ ﴾ {ரப்[(b)]பான} இங்கு "தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்" நிலைநாட்டப்பட்டுள்ளது. | ﴿ لِلَّهِ ﴾ {அல்லாஹ்வுக்கே} இங்கு "தவ்ஹீதுல் உலூஹிய்யஹ்" நிலைநாட்டப்பட்டுள்ளது. | ﴿ ٱلۡحَمۡدُ ﴾ {எல்லாப் புகழும்} இங்கு "தவ்ஹீதுல் அஸ்மாஇ வஸ்-ஸிபாத்" நிலை நாட்டப்பட்டுள்ளது. |

எதன் மூலம் உனது ரப்[(b)]பை நீ அறிந்துகொண்டீர்? என உன்னிடம் வினவப்பட்டால், அவனது அத்தாட்சிகள் மற்றும் படைப்புகள் மூலம் என்று கூறுவீராக. இரவு, பகல், சூரியன், சந்திரன் ஆகியன அவனது அத்தாட்சிகளில் உள்ளவை, ஏழு வானங்களும் ஏழு பூமிகளும் அவற்றிலும் அவற்றுக்கிடையில் இருப்பவையும் அவனது படைப்புகளில் உள்ளவையாகும் என்று கூறுவீராக.

ஆதாரம் அல்லாஹ்வின் கூற்று: {இரவும், பகலும்; சூரியனும், சந்திரனும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளவைதாம். ஆகவே, நீங்கள் அல்லாஹ்வையே வணங்குகிறவர்களாக இருந்தால் சூரியனுக்கும், சந்திரனுக்கும் ஸுஜூது செய்யாதீர்கள் - இவற்றைப் படைத்தவனாகிய அல்லாஹ்வுக்கே ஸுஜூது செய்யுங்கள்.} [41:37]

{நிச்சயமாக உங்கள் ரப்[(b)](இறைவன்) ஆகிய அல்லாஹ் தான் ஆறு நாட்களில் வானங்களையும், பூமியையும் படைத்தான். பின் அரியாசனத்திற்கு (அர்ஷிற்கு) மேல் உயர்ந்துவிட்டான். இரவு பகலை வெகு விரைவாக பின் தொடர்கின்ற நிலையில் இரவால் பகலை அவனே மூடுகிறான்; இன்னும் சூரியனையும்; சந்திரனையும், நட்சத்திரங்களையும் தன் கட்டளையைக் கொண்டு வசப்படுத்தப்பட்டவையாகப் படைத்தான்; கவனத்தில் கொள்க: அவனுக்கே படைத்தலும், கட்டளையும் சொந்தமனவை. அகிலங்களைப் படைத்து, பராமரிகப்பவனாகிய அல்லாஹ்வே மிகவும் பாக்கியமுடையவன்.} [7:54](1).

(1) அல்லாஹ் இருக்கிறான் என்பதற்கும் அவனைத் தவிர ரப்[(b)]போ படைப்பாளனோ, உண்மையாக வணங்கப்படுபவனோ இல்லை என நிறுவுவதற்கும் ஆதாரமாகவுள்ள பல அத்தாட்சிகளையும் படைப்புகளையும் நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். அவற்றுக்கான ஆதாரங்களையும் குர்ஆனில் இருந்து கொடுத்துள்ளார்.

* ஒவ்வொரு படைப்பும் அல்லாஹ் இருக்கிறான் என்பதற்கு அத்தாட்சியாகும். ஆனாலும், ஷேய்குல் இஸ்லாம் முஹம்மத் இப்னு அப்துல்வஹ்ஹாப் رَحِمَهُ اللَّهُ இங்கு அத்தாட்சியையும் படைப்பையும் தனித்தனியாக குறிப்பிட்டுள்ளார். ஏனெனில், இரவு, பகல் போன்ற அத்தாட்சிகள் மாற்றம் ஏற்படக்கூடியவை. எதில் மாற்றம் ஏற்படுமோ அதில் மாற்றம் ஏற்படாத படைப்பை விட அதாரம் பலமாக இருக்கும்.

ரப்[(b)]பாக இருப்பவனே வணங்கப்பட வேண்டியவன். ஆதாரம் அல்லாஹ்வின் கூற்று:

மனிதர்களே! நீங்கள் உங்களையும் உங்களுக்கு முன்னிருந்தவர்களையும் படைத்த ரப்[(b)]பையே வணங்குங்கள். (அதனால்) நீங்கள் இறை அச்சமுடையவர்களாக ஆகலாம். (தண்டனையில் இருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்). அ(ந்த ரப்[(b)]பான)வனே உங்களுக்காக பூமியை விரிப்பாகவும், வானத்தை முகடாகவும் அமைத்து, வானத்தில் இருந்து மழை பொழியச் செய்து; அதைக் கொண்டு உங்களுக்கு உணவாக விளைபொருட்களை வெளிவரச் செய்கிறான்; (இவற்றை எல்லாம்) நீங்கள் அறிந்து கொண்டே இருக்கும் நிலையில் அல்லாஹ்வுக்கு இணைகளை ஏற்படுத்தாதீர்கள்.} [2:21-22] (2).

(2) இந்த ஆயத் அல்-பகரஹ் ஸூராவில் உள்ளது. இந்த ஆயத்தில் தான் குர்ஆனில் முதலில் விளித்து அழைக்கப்பட்டுள்ளது. அது தான் {மனிதர்களே!} என்பது. அதிலே தான் குர்ஆனில் முதல் ஏவல் வினையும் இடம் பெற்றுள்ளது. அது தான் {வணங்குங்கள்} அதாவது: ஓர்மைப்படுத்துங்கள் என்பது. அதிலே தான் குர்ஆனில் முதல் விலக்கலும் இடம் பெற்றுள்ளது. அது தான் {அல்லாஹ்வுக்கு இணைகளை ஏற்படுத்தாதீர்கள்} என்ற ஷிர்கிற்கான தடையாகும்.

(பிரபல குர்ஆன் விரிவுரையாளர்) இப்னு கஸீர் رَحِمَهُ ٱللَّهُ கூறுகிறார்: இவற்றைப் படைத்தவனே வணங்கப்படத் தகுதியானவன்(1).

(1) அதாவது தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்வில் ஏகனாக இருப்பவனே தவ்ஹீதுல் உலூஹிய்யஹ்விலும் ஏகனாக்கப்பட வேண்டியவன்.

அல்லாஹ் கட்டளையிட்ட இபாதத்களின் வகைகள்(2):

(2) இப்னு கஸீர் அவர்களின் கூற்றை நூலாசிரியர் குறிப்பிட்ட பின் உள, உடல் ரீதியான பல்வேறு வணக்கங்களையும் அந்த ஒவ்வொரு (வணக்க)அமலுக்கான ஆதாரத்தையும் குர்ஆனிலிருந்து குறிப்பிட்டுள்ளார். அவை பின்வருமாறு:

இஸ்லாம், ஈமான், இஹ்ஸான் போன்றவை. மேலும், துஆ (பிரார்த்தனை), கவ்ப் (பயப்படுதல்), ரஜா (ஆதரவு வைத்தல்), தவக்குல் (பாரம் சாட்டுதல்), ரக்ஃபஹ் (ஆர்வப்படுதல்), ரஹ்பஹ் (பீதி), குஷூஹ் (பணிதல்), கஷ்யஹ் (அச்சம்), இனாபஹ் (மீளுதல்), இஸ்திஆனஹ் (உதவி தேடுதல்), இஸ்திஆதஹ் (பாதுகாப்பு தேடல்), இஸ்திகாஸஹ் (காப்பாற்ற கோரல்), தப்ஹ் (அறுத்துப் பலியிடல்), நத்ர் (நேர்ச்சை), மற்றும் அவை அல்லாத அல்லாஹுத் தஆலா கட்டளையிட்ட ஏனைய வணக்க வகைகள். அவை அனைத்தும் அல்லாஹ்வுக்கே சொந்தமானவை.

ஆதாரம் அல்லாஹ்வின் கூற்று: {நிச்சயமாக மஸ்ஜிதுகள் அல்லாஹ்வுக்காகவே இருக்கின்றன; எனவே, அல்லாஹ்வுடன் எவரையும் நீங்கள் அழைக்க வேண்டாம்.} [72:18]

மேற்படி வணக்கங்களில் ஏதேனும் ஒன்றை அல்லாஹ் அல்லாதவருக்கு செய்பவர் முஷ்ரிக், காபிர் ஆவார்.
ஆதாரம் அல்லாஹ்வின் கூற்று:

{எவன் அல்லாஹ்வுடன் வேறு கடவுளை (வணக்கத்திற்கு உரியவன் என) அழைக்கின்றானோ அவனிடத்தில் அதற்குரிய யாதொரு ஆதாரமும் இல்லை. அவனுடைய (பாவக்) கணக்கு அவனுடைய இறைவனிடத்தில்தான் (தீர்க்கப்படும்). நிச்சயமாக இத்தகைய நிராகரிப்பவர்கள் வெற்றி பெறமாட்டார்கள்.} [23:117]

((பிரார்த்தனை வணக்கத்தின் அடிப்படையாகும்)) என்று ஹதீஸில் இடம் பெற்றுள்ளது.

{உங்கள் இறைவன் கூறுகிறான்: என்னையே நீங்கள் பிரார்த்தியுங்கள்; நான் உங்களுக்கு பதிலளிக்கிறேன்; எவர்கள் என்னை வணங்குவதை விட்டும் பெருமையடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் சிறுமையடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள்.} [40:60]

பிரார்த்தனை الدعاء இரு வகைப்படும்:

دعاءُ عبادةٍ:
வணக்கப் பிரார்த்தனை:
அது ஒரு பிரார்த்தனை என்பதை நிலைமை குறிக்கும். உதாரணம்: தொழுகை, நோன்பு, ஹஜ்

இதை அல்லாஹ் அல்லாதவருக்கு செய்வது ஷிர்க் அக்பர் (பெரிய ஷிர்க்) ஆகும்.

دعاءُ مسألةٍ:
வேண்டுதல்:
சொல்லால் வேண்டுதல். உதாரணமாக: என்னை மன்னித்துவிடு, எனக்கு அருள்புரி போன்ற சொற்கள்

அதன் சட்டம் வித்தியாசமானது. அது இரு வகைப்படும். அதன் விளக்கம் வருமாறு:




ஆனால், வேண்டப்படும் இவருக்கு மறைமுகமான இயக்கம்/சக்தி இருப்பதாகவும், நலன்களை ஏற்படுத்துவதும் கெடுதிகளைத் தடுப்பதும் இவரது கையில் இருப்பதாகவும் நம்புவது ஷிர்க் - இணைவைத்தலாகும்.

### ❖ குறிப்பு:

நாம் செயலுக்கான சட்டத்தை/தீர்ப்பை கற்கிறோம். ஆனாலும், அச்செயலை செய்தவர் மீது தீர்ப்புக் கூறுவதற்கு ஆதாரம் சரியாக நிலை நாட்டப்படுதல், சந்தேகம் நீங்குதல் என்பன அவசியமாகும். ஒரு செயலை செய்பவர் முஃமின் அல்லது காபிர் என தீர்ப்புக் கூறும் உரிமை உலமாக்களுக்கு மட்டுமே உள்ளது.

## காரணங்கள்/சாதனங்கள் தொடர்பான நம்பிக்கையில் மக்கள் மூன்று பிரிவினராக உள்ளனர்:

ஒரு பிரிவினர் அல்லாஹ் எதை காரணமாக வைத்திருக்கிறானோ அதை காரணம் என்று மாத்திரம் நம்புகிறார்கள். இதுவே சரியான நிலைப்பாடாகும்

இன்னொரு பிரிவினர் அல்லாஹ் எதை சபபாக / காரணமாக வைக்கவில்லையோஅதை காரணம் என்று நம்புகிறார்கள். இதுசிறிய இணைவைத்தல் ஆகும் (ஷிர்க் அஸ்க(ு)ர்)

மேலும் ஒரு பிரிவினர் காரணம் சுயமாக தாக்கம் செலுத்தக் கூடியது. அது தானாகவே நன்மை பயக்கும்/ தீமையை தடுக்கும் என்று நம்புகிறார்கள். இது பெரிய இணைவைத்தலாகும் (ஷிர்க் அக்பர்)

**மார்க்க ரீதியான காரணங்கள்** மார்க்கம் அனுமதித்த ஓதிப்பார்த்தலை போன்றது. அல்லாஹ் ஓதிப்பார்ப்பதை நோயை நீக்குவதற்கான மார்க்க ரீதியான காரணமாக வைத்துள்ளான்.

**புலன்களால் அறிந்து கொள்ள முடியுமான காரணங்கள்** மருந்தை போன்றது. அதனை அல்லாஹ் நிவாரணத்திற்கான காரணமாக வைத்துள்ளான்.

((**பிரார்த்தனை வணக்கத்தின் அடிப்படையாகும்**)) என்பது பலவீனமான ஹதீஸாகும்.

((**பிரார்த்தனையே வணக்கம்**)) என்ற நபி ﷺ அவர்களின் கூற்றே ஆதாரப்பூர்வமானதாகும்.

## "பிரார்த்தனையே வணக்கம்" என்பதன் விளக்கம்:

இவ்வசனம் இதற்கு ஆதாரமாக உள்ளது:

{உங்கள் இறைவன் கூறுகிறான்: என்னையே நீங்கள் பிரார்த்தியுங்கள்; நான் உங்(கள் பிரார்த்தனை)களுக்கு பதிலளிக்கிறேன்; எவர்கள் என்னை வணங்குவதை விட்டும் பெருமையடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் சிறுமையடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள்.} [40:60]

அல்லாஹ் இங்கு ﴿عِبَادَتِي﴾ {என்னை வணங்குவதை} என்று கூறியிருப்பது பிரார்த்தனை ஒரு வணக்கம் என்பதற்கு ஆதாரமாகும்.

"கவ்ப்" (பயப்படுதல் என்ற வணக்கத்தி)ற்கான ஆதாரம்: {நீங்கள் முஃமீன்களாக இருந்தால் அவர்களுக்கு பயப்பட வேண்டாம்; என்னையே பயந்து கொள்ளுங்கள்} [3:175] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்(1).

(1) க(kh)வ்ப்(f) "الخوف" (பயப்படுதல்) என்பது: ஏதாவது ஒரு விடயத்தில் அழிவு அல்லது தீங்கு அல்லது பாதிப்பு ஏற்படும் என்று எதிர்பார்க்கப்படும் போது ஏற்படும் உணர்வு.

அல்லாஹ் سُبْحَانَهُ وَتَعَالَى இந்த வசனத்தில் ஷெய்த்தானின் தோழர்களை பயப்படக்கூடாது என்று தடை செய்கிறான். தன்னை மாத்திரம் பயப்பட வேண்டும் என கட்டளையிடுகிறான்.

### "க(kh)வ்ப்(f)" (பயம்), மூன்று வகைப்படும்:

1- வணக்கம், மகத்துவப்படுத்துதல், மர்மமான அச்சம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட பயம். அதாவது வணங்குபவன் வணங்கப்படுபவனை பயப்படுதல். அதிலே பணிவு, தாழ்மை, மகத்துவம், வணங்கப்படுபவனுக்கு மரியாதை ஆகியவை காணப்படும்.

இந்த வகை அல்லாஹ்வுக்கு கட்டாயமாக செய்யப்பட வேண்டியதாகும். இதனை அல்லாஹ் அல்லாதவருக்குச் செய்வது ஷிர்க் அக்பர் - பெரிய இணைவைத்தலாகும்.

2- இயற்கைப் பயம்: நெருப்பு, எதிரி, கடிக்கும் மிருகம் போன்றவற்றை மனிதன் பயப்படுவதைப் போல.
இது அனுமதிக்கப்பட்டதாகும்.

3- ஹராமான (தடைசெய்யப்பட்ட) பயம்: அல்லாஹ்வின் அருளில் இருந்து நிராசை அடையும் விதத்தில் அவனைப் பயப்படுவதை போன்றது. அல்லது படைத்தவனுக்கு மாறு செய்யும் விடயத்தில் படைக்கப்பட்டவனுக்கு பயப்பட்டு வழிப்படுவதைப் போன்றது.

"ரஜா" (ஆதரவுவைத்தல் என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {எவன் தன்னுடைய இறைவனைச் சந்திக்கலாமென ஆதரவு வைக்கின்றானோ அவன் (ஸாலிஹான) நல்ல செயல்களைச் செய்து, தன் இறைவனை வணங்குவதில் வேறெவரையும் இணையாக்காதும் இருப்பானாக.} [18:110] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்(1).

(1) "ரஜா" "الرجاء" (ஆதரவு வைத்தல்) என்பது: இலகுவாக பெற்றுக்கொள்ள முடியுமான ஒன்றை ஆசைப்படுவதாகும். சிலவேளை பெற்றுக்கொள்வதற்கு கடினமாக இருக்கக் கூடியதை ஆசைப்படுவதற்கும் பயன்படுத்தப்படும்.

"ரஜா" (ஆதரவு வைத்தல்) என்பதில் பணிவு, தாழ்ச்சியாதல் என்பன கலந்திருந்தால் அது அல்லாஹ்வுக்கு மாத்திரம் செய்யப்பட வேண்டியதாகும். அல்லாஹ் அல்லாதவருக்கு செய்வது பெரிய இணைவைத்தலாகும்.

புகழுக்குரிய (வரவேற்கத்தக்க "ரஜா" -) ஆதரவு வைத்தல் என்பது அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு அவனுடைய கூலியை எதிர்பார்க்கும் ஒருவரிடமிருந்து ஏற்படக்கூடியதாகும். அல்லது அவனுக்கு மாறு செய்வதிலிருந்து தவ்பஹ் (பாவமன்னிப்பு) கோரி, தன்னுடைய தவ்பஹ் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்று ஆதரவு வைக்கும் ஒருவரிடமிருந்து ஏற்படக்கூடியதாகும்.

அமல் (நட்கிரிகைகள்) செய்யாமல் ஆதரவு வைப்பது என்பது வெறும் ஏமாற்றமும் இகழப்படும் மேலெண்ணமுமாகும்.

"தவக்குல்" (பாரம் சாட்டுதல் என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {நீங்கள் (உண்மை) நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வின் மீதே தவக்குல் வைத்து (அவனையே முழுமையாகச் சார்ந்திருந்து) கொள்ளுங்கள்.} [5:23]
{எவர், அல்லாஹ்வின் மீது தவக்குல் வைக்கிறாரோ, அவருக்கு அவன் போதுமானவன்.} [65:3] ஆகிய அல்லாஹ்வின் கூற்றுகளாகும்.

## தவக்குல் (பாரம் சாட்டுதல்) என்பதின் வரைவிலக்கணம்:

மொழி ரீதியாக: ஒன்றின் மீது தவக்குல் வைப்பது என்பது அதைச் சார்ந்து இருப்பதை குறிக்கும்.
(அதாவது ஒன்றின் மீது பொறுப்பு சுமத்தி, காரியத்தை ஒப்படைத்து, அதனைச் சார்ந்து இருப்பதை குறிக்கும்)

மார்க்க ரீதியாக: அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து, அவனை உண்மையாக சார்ந்திருந்து, மார்க்கம் சொல்லக்கூடிய ஸப(b)ப்களை (வழிமுறைகளை) கடைபிடிப்பது.

**தவக்குலில் மூன்று விடயங்கள் கட்டாயம் பேணப்பட வேண்டும்:**

1- ஸித்க்: அல்லாஹ்வை சார்ந்து இருப்பதில் உண்மைத்தன்மை.

2- அஸ்-ஸிகஹ்: அல்லாஹ் தான் வாக்களித்ததை நிறைவேற்றுவான் என்ற நம்பிக்கை.

3- மார்க்க ரீதியான ஸப(b)ப்களை (வழிமுறைகளை/ காரணங்களை) செயல்படுத்துதல்.

ரக்ஃபஹ் (ஆசை), ரஹ்பஹ் (அச்சம்), குஷூஹ் (பணிதல்-தாழ்ச்சியாதல்) ஆகிய (வணக்கங்)களிற்கான ஆதாரம்:

{நிச்சயமாக இவர்கள் (ஸகரிய்யா, அவரின் மனைவி, அவர்களின் மகன்) நன்மைகள் செய்வதில் விரைபவர்களாகவும், (எமது கூலியில்) ஆசை கொண்டும், (எமது தண்டனையின்) பயத்தோடும் எம்மை பிரார்த்திப்பவர்களாகவும் இருந்தார்கள். மேலும், அவர்கள் நமக்கு பணிபவர்களாக இருந்தார்கள்.} [21:90] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.

ரக்ஃபஹ் "الرغبة" (ஆசை): விருப்பத்துக்குரியதை அடைந்துகொள்வதற்கான ஆசை.

ரஹ்பஹ் "الرهبة" : பயப்படப்படுவதிலிருந்து விரண்டோடச் செய்யும் பயம். (அல்லாஹ்வின் தண்டனை விடயத்தில் ஏற்படும்) இப் பயம் அமலுடன் சேர்ந்து இருக்க வேண்டும்.

குஷூஹ் "الخشوع" (தாழ்ச்சியாதல்): அல்லாஹ்வின் மகத்துவத்திற்கு தாழ்தல், அடிபணிதல். அவனது விதியின் தீர்ப்பு மற்றும் மார்க்கச் சட்டத் தீர்ப்பு ஆகியவற்றுக்கு தன்னை கட்டுப்படுத்திக் கொள்ளல்.

❖ அல்லாஹ்வின் பக்கம் பயணிப்பவனிடத்தில் பயம், ஆதரவு வைத்தல் ஆகிய இரண்டும் ஒன்றாக கலந்திருப்பது கட்டாயமாகும். அற்றில் ஒன்று மற்றதை மிகைத்து விடக்கூடாது. அவ்வாறு செய்தால் அவன் விழுந்துவிடுவான், அழிந்துவிடுவான்.

பயமும் ஆதரவுவைத்தலும் ஒரு பறவையின் இரு இறக்கைகளைப் போல அவனிடத்தில் அவசியமாக காணப்பட வேண்டும்.

"கஷியஹ்" (பயபக்தி என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {அவர்களுக்குப் அஞ்சவேண்டாம்; என்னையே அஞ்சிக்கொள்வீர்களாக.} [2:150] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.

கஷியஹ் "الخشية" (பக்தி கலந்த அச்சம்): அஞ்சப்படுபவனின் மகத்துவம், அவனது பூரணமான அதிகாரம் ஆகியவற்றை அறிந்து கொள்வதால் ஏற்படும் பயமாகும்.

"இனாபஹ்" (மீளுதல் என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {உங்கள் இறைவனின் பக்கம் மீளுங்கள். மேலும், அவனுக்கு கட்டுப்படுங்கள்.} [39:54] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.

இனாபஹ் "الإنابة" (மீளுதல்): அல்லாஹ்வை வழிப்படுவதன் மூலமும் அவனுக்கு மாறு செய்வதிலிருந்து விடுபடுவதன் மூலமும் அவனின் பக்கம் மீண்டு செல்வதாகும்.

{உங்கள் இறைவனின் பக்கம் (உள்ளத்தால்) மீளுங்கள்.} அதாவது அவன் பக்கம் திரும்பிவிடுங்கள். {மேலும், அவனுக்கு கட்டுப்படுங்கள்.} அதாவது, உன்னுடைய காரியத்தை அல்லாஹ்வுக்கு ஒப்படைத்து விடு. ஏனென்றால், நீ அவனின் அடிமை. அடிமையை பொறுத்தவரை தன்னுடைய எஜமானுக்கு தன்னை ஒப்படைத்து விடுவது அவசியம். ((அல்லாஹ்தான் (யதார்த்தமான) எஜமான்)) என்று நபிகள் நாயகம் - ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் கூறியுள்ளார்கள்.

"இஸ்திஆனஹ்" (உதவி தேடுதல் என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {உன்னையே வணங்குகிறோம் உன்னிடமே உதவி தேடுகிறோம்} [1:5] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.
**((நீ உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவி தேடிக்கொள்.))** என்று ஹதீஸில் இடம்பெற்றுள்ளது.

"இஸ்திஆனஹ்" "الاستعانة": உதவி தேடுதல். மேற்படி [1:5] வசனத்தில் எது பின்னர் இடம்பெற வேண்டுமோ அது முற்படுத்தப்பட்டிருக்கிறது. இது "இஸ்திஆனஹ்" அல்லாஹ்வுக்கு மாத்திரம் செய்யப்பட வேண்டியது என வரையறுக்கப்பட்டிருப்பதையே குறிக்கிறது. அதாவது உன்னைத் தவிர வேறு எவரையும் நாங்கள் வணங்க மாட்டோம். உன்னிடமே தவிர வேறு எவரிடத்திலும் நாம் உதவிதேடமாட்டோம்.

"இஸ்திஆதஹ்" (பாதுகாப்புத் தேடுதல் என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {வைகறையின் இறைவனிடத்தில் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று (நபியே) கூறுவீராக.} [113:1]

{மனிதர்களின் இறைவனிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக.} [114:1] என்ற அல்லாஹ்வின் கூற்றுகளாகும்.

"இஸ்திஆதஹ்" "الاستعاذة" (பாதுகாப்புத் தேடுதல்): பாதுகாக்குமாறு வேண்டுதல். பாதுகாப்பு என்பது வெறுப்புக்குரிய ஒன்றிலிருந்து காப்பாற்றுவதைக் குறிக்கும். (أعوذ) என்றால் ஒதுங்கி, காவல் பெற்றுக்கொள்கிறேன் என்று அர்த்தம்.

"இஸ்திகாஸஹ்" (இரட்சிக்க வேண்டுதல்: என்ற வணக்கதி)ற்கான ஆதாரம்: {நீங்கள் உங்கள் இறைவனிடத்தில் (உதவிசெய்து) இரட்சிக்குமாறு வேண்டிய பொழுது உங்களுக்கு அவன் பதிலளித்ததை நினைவு கூறுவீர்களாக.} [8:9] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.

இஸ்திகாஸஹ் (இரட்சிக்க, துன்பதுயர் நீக்கக் கோரல் /நிவாரணம் வேண்டுதல்): அதாவது கஷ்டம் மற்றும் அழிவிலிருந்து காப்பாற்றுமாறு வேண்டுதல்.

❖ "இஸ்திஆனஹ்", "இஸ்திஆதஹ்", "இஸ்திகாஸஹ்", "பரிந்துரை" ஆகியவற்றை அவற்றுக்கு சக்தி பெற்ற படைக்கப்பட்டவர்களிடமும் நான்கு நிபந்தனைகளுக்கு உட்பட்டு வேண்ட முடியும். அவை: 1- உதவி வேண்டப்படுபவர் உயிர் உள்ளவராகவும் 2- சமூகமளித்த நிலையிலும் 3- அதற்கு சக்தி பெற்றவராகவும் இருப்பதோடு 4- அவர் வெறும் ஒரு சப(b)ப் (காரணம் / சாதனம் / வழிமுறை) தவிர சுய தாக்கம் அற்றவர் என்றும் நம்ப வேண்டும்.

"தப்ஹ்" (அறுத்துப் பலியிடுதல்: என்ற வணக்கத்தி)ற்கான ஆதாரம்: {எனது தொழுகையும் எனது பலியிடலும் எனது வாழ்வும் எனது மரணமும் அகிலங்களின் அதிபதியான அல்லாஹ்விற்காகவே. அவனுடன் எவரும்/எதுவும் இணையாக இல்லை.} [6:162-163] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.
((அல்லாஹ் அல்லாதவருக்கு அறுத்துப் பலியிடுபவனை அல்லாஹ் சபித்துவிட்டான்.)) என்று சுன்னஹ்விலுள்ளது.

அறுத்துப் பலியிடல்: என்பது குறிப்பிட்ட முறையைப் பேணி இரத்தத்தை ஓட்டி, உயிரை பிரியச்செய்வதாகும்.

## அறுத்துப் பலியிடுதல் மூன்று வகைப்படும்:

1- அல்லாஹ்வுக்காக அறுத்துப் பலியிடுதல். உதாரணம்: ஹதீ, உழ்ஹிய்யஹ், ஏனைய உபரியான அறுத்துப் பலியிடல்கள்.

2- அல்லாஹ் அல்லாதவருக்காக நேசத்தின் காரணமாகவும் மகத்துவப்படுத்துவதற்காகவும் அறுத்துப் பலியிடுதல். உதாரணம்: ஜின்களுக்காகவும் மண்ணறைகளில் உள்ளவர்களுக்காகவும் அறுத்துப் பலியிடுவது. இது பெரிய இணைவைத்தலாகும்.

3- ஆகுமாக்கப்பட்ட அறுப்பு. உதாரணம்: இறைச்சிக்காக / விருந்தினரை உபசரிப்பதற்காக / விற்பனைக்காக அறுத்துப் பலியிடுவது.

❖ குறிப்பு: அறுப்புடன் சம்பந்தப்பட்ட மேலதிகமான விளக்கங்கள் அல்லாஹ்வின் உதவியால் கிதாபுத் தவ்ஹீதில் இடம்பெறவுள்ளன.

"நஸ்$^{(z)}$ர்" (நேர்ச்சை: என்ற வணக்கத்தி)ற்கான ஆதாரம்: {அவர்கள் நேர்ச்சையை நிறைவேற்றுபவர்களாகவும் தீங்கு பரவிக்கிடக்கும் (மறுமை) நாளை பயப்படுபவர்களாகவும் இருக்கின்றனர்.} [76:7] என்ற அல்லாஹ்வின் கூற்றாகும்.

## நேர்ச்சையின் வரைவிலக்கணம்:

மொழி வழக்கில்: சபதம் எடுத்தல், கட்டாயமாக்கிக் கொள்ளல்.
மார்க்க வழக்கில்: மார்க்க ஏவல் விலக்கல்களுக்கு உட்பட்டவர் கட்டாயம் இல்லாத ஒரு வழிபாடைச் செய்வதற்கு தன்னை கட்டாயப்படுத்திக்கொள்ளல்.

❖ குறிப்பு: நேர்ச்சைக்கு வகைகள், நிபந்தனைகள், பரிகாரம் என்பன காணப்படுகின்றன. அவை சம்பந்தப்பட்ட மேலதிக விளக்கம் அல்லாஹ்வின் உதவியால் (நூலாசிரியரின்) கிதாபுத் தவ்ஹீத் என்ற நூலில் இடம்பெறவுள்ளது.

## நேர்ச்சையின் வகைகள்:

1-அல்லாஹ்வுக்காக வைக்கப்படும் நேர்ச்சை
2-அல்லாஹ் அல்லாதவருக்காக வைக்கப்படும் நேர்ச்சை.

❖ நூலாசிரியர் இங்கு குறிப்பிடாத பல இபாதத்கள் காணப்படுகின்றன. உதாரணத்திற்காகவே சிலதை குறிப்பிட்டுள்ளார். அவற்றுடன் வணக்கங்களை மட்டுப்படுத்துவது நோக்கமன்று. நாம் புரிந்து கொள்ள வேண்டியது யாதெனில் இங்கு குறிப்பிடப்பட்ட இபாதத்களையோ ஏனைய இபாதத்களையோ யாராவது அல்லாஹ் அல்லாதவர்களுக்காகச் செய்வாராயின் அவர் இணை வைத்து விட்டார் என்பதேயாகும்.

இரண்டாவது அடிப்படை: ஆதாரங்களுடன் இஸ்லாம் மார்க்கத்தைப் பற்றி அறிந்து கொள்வது.

**இஸ்லாம் என்பது:** அல்லாஹ்வை மாத்திரம் ஏகத்துவப்படுத்துவதன் மூலம் அவனுக்கு சரணடைதல், அவனை வழிப்படுவதன் மூலம் அவனுக்குக் கட்டுப்படுதல், இணைவைப்பு மற்றும் அதைச் செய்பவர்களிடம் இருந்து ஒதுங்கி இருத்தல்.

**அது மூன்று படித்தரங்களை உடையது:** இஸ்லாம், ஈமான், இஹ்ஸான். ஒவ்வொரு படித்தரத்திற்கும் "ருகுன்கள்" (அடிப்படைகள் / தூண்கள்) உள்ளன.

நூலாசிரியர் இரண்டாவது அடிப்படையை விளக்குகிறார். ஆரம்பமாக இஸ்லாத்தின் வரைவிலக்கணத்தை குறிப்பிட்டுள்ளார்.

அதன் அர்த்தம் யாதெனில்: உன்னுடைய காரியத்தை அல்லாஹ்வுக்கு ஒப்படைத்து விடு. ஏனென்றால், நீ அவனின் அடிமை. அடிமையை பொறுத்தவரை தன்னுடைய எஜமானுக்கு தன்னை ஒப்படைத்து விடுவது அவசியம். ((அல்லாஹ்தான் (யதார்த்தமான) எஜமான்)) என்று நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் கூறியுள்ளார்கள்.

பின்னர் மார்க்கத்தை மூன்று படித்தரங்களாக பிரித்துள்ளார்.
அவை: 1- இஸ்லாம் 2- ஈமான் 3- இஹ்ஸான்.

**முதல் படித்தரம்:** இஸ்லாம்.
அதன் அடிப்படை தூண்கள் ஐந்து. அவை: அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் எவரும் இல்லை என்றும் முஹம்மத் –ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி பகருதல், தொழுகையை நிலை நாட்டுதல், ஸகாத்தை நிறைவேற்றுதல், ரமலானில் நோன்பு நோற்றல், சங்கையான அல்லாஹ்வின் ஆலயத்தை நாடிச்சென்று ஹஜ்செய்தல்.

இஸ்லாத்தின் தூண்கள் ஐந்து:

முதலாவது: ஷஹாதஹ் (சாட்சி கூறல்).

**ஷஹாதஹ்வுக்குரிய ஆதாரம்** பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்:
{அல்லாஹ் நீதியை நிலைநாட்டக்கூடியவனாக உள்ள நிலையில் அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை என்று அவனும் மலக்குகளும் அறிவுடையோரும் சாட்சி கூறுகிறனர். மிகைத்தவனும் ஞானமுடையவனுமான அவனையன்றி வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை.}
[3:18]

**அதன் அர்த்தம்:** அல்லாஹ்வைத் தவிர உண்மையாக வணங்கப்படுபவன் யாரும் இல்லை என்பதாகும்.
((**லா இலாஹ**: வணக்கத்திற்குரியவன் இல்லை)): என்ற வார்த்தை அல்லாஹ் அல்லாமல் வணங்கப்படுகின்ற அனைத்தையும் மறுக்கிறது.
((**இல்ல-ல்லாஹ்:** அல்லாஹ்வைத் தவிர)): என்ற வார்த்தை அல்லாஹ் மாத்திரமே வணங்கப்படுவதற்கு தகுதியானவன் என்பதை உறுதி செய்கிறது; ஆட்சி, அதிகாரம் செய்வதில் அல்லாஹ் இணை அற்றவனாக இருப்பது போன்றே வணக்கத்திலும் அவனுக்கு இணை இல்லை.

நூலாசிரியர் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை என்று சாட்சி கூறுவதற்கான ஆதாரத்தை குறிப்பிட்டுவிட்டு அதன் அர்த்தத்தை தெளிவுபடுத்தியுள்ளார். அது தான் அல்லாஹ்வைத் தவிர உண்மையாக வணங்கப்படுபவன் எவரும் இல்லை என்பது.

இந்த இஃலாஸுக்குரிய சாட்சியம் இரண்டு விடயங்களை உள்ளடக்குவது அவசியமாகும்:

1-மறுத்தல்

2-உறுதி செய்தல்

"லா இலாஹ" என்ற வார்த்தையில் மறுத்தல் உள்ளது.

"இல்ல-ல்லாஹ்" என்ற வார்த்தையில் உறுதி செய்வது உள்ளது.

இத்தகைய வார்த்தைப் பிரயோக முறையானது மட்டுப்படுத்துதலையும், உறுதிசெய்து நிலைநாட்டுவதையும் குறிக்கக் கூடியதாகும்; அதாவது இந்த சாட்சியம் வணக்கம் அல்லாஹ்வுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டும் என்பதை மட்டுப்படுத்தி, உறுதி செய்து, அவன் அல்லாதவர்களுக்கு அதைச் செய்வதை மறுக்கிறது. அதனால் தான் பின்வரும் வசனங்கள் அதனை விளக்குவதாக நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

**ஷஹாதஹ்வின் விளக்க**த்தை பின்வரும் அல்லாஹ்வின் கூற்றுகள் தெளிவுபடுத்துகின்றன:

{இப்ராஹீம் தம் தந்தையையும், தம் சமூகத்தவர்களையும் நோக்கி: "நிச்சயமாக நான், என்னைப் படைத்தவனைத் தவிர நீங்கள் வணங்குபவற்றை விட்டும் விலகியவன். அதனால், அவன் எனக்கு நேர்வழிகாட்டுவான்" என்று கூறிய நேரத்தை நினைத்துப் பார்பீராக! இன்னும், தன் சந்ததியினர் (அல்லாஹ்வின் பக்கம்) திரும்பி வரும் பொருட்டு (இப்ராஹீம் தவ்ஹீதின் வார்த்தையான) அதனை அவர்களிடம் ஒரு நிலையான வாக்காக ஏற்படுத்தினார்.} [43:26-28]

{நான் நீங்கள் வணங்குபவற்றை விட்டும் விலகியவன்} இது "லா இலாஹ" (வணக்கத்திற்குரியவன் எவனும் இல்லை) என்ற வார்த்தையின் கருத்தைக் குறிக்கிறது.

{என்னைப் படைத்தவனைத் தவிர} இது "இல்ல-ல்லாஹ்" (அல்லாஹ்வைத் தவிர) என்ற வார்த்தையின் கருத்தைக் குறிக்கிறது.

"லா இலாஹ இல்லல்லாஹ்" (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் இல்லை) என்ற சாட்சியத்தின் கருத்து "வணங்கப்படுபவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை" என்பதுதான் என்று எவராவது வாதிட்டால்.
நாம் கூறும் பதில் யாதெனில்: இந்த விளக்கம் தவறானதாகும். ஏனெனில் அல்லாஹ் அல்லாத ஏனைய வணங்கப்படுகின்ற அனைத்தையும் சரி காணக்கூடியதாக இவ்விளக்கம் இருக்கிறது. ஆனால் "உண்மையாக / தகுதியுடன்" என்ற வார்த்தையை சேர்த்து விளக்கும்போது அல்லாஹ் அல்லாமல் வணங்கப்படுகின்ற அனைத்தும் நிராகரிக்கப்படுகின்றது. அல்லாஹ்வைத் தவிர உண்மையாக / தகுதியுடன் வணங்கப்படுபவன் வேறு எவரும் இல்லை என்பதை குறிக்கிறது. ஏனைய வணங்கப்படுகின்ற அனைத்தும் தகுதியற்றவை, போலியானவை, உண்மைக்குப் புறம்பானவை என்பதை காட்டுகிறது.

"லா இலாஹ இல்லல்லாஹ்" (உண்மையாக வணங்கப்படுபவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை) என்ற வார்த்தையின் அர்த்தம் "உண்மையான "ரப்[(b)]" - படைத்துப் பராமரிப்பவன் அல்லாஹ்வைத் தவிர எவரும் இல்லை" என்பதுதான் என்று எவரேனும் வாதிட்டால்.
அவருக்கு நாம் கூறும் பதில் யாதெனில்: இந்த வார்த்தை சரியானதுதான். ஆனாலும் இது "லா இலாஹ இல்லல்லாஹ்"வின் விளக்கமன்று. ஏனெனில், இது தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்வை குறிக்கிறது. அதனை நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் எந்தக் காஃபிர்களிடத்தில் அனுப்பப்பட்டார்களோ அவர்களும் ஏற்றிருந்தார்கள். ஆயினும், அது அவர்களை இஸ்லாத்திற்குள் நுழைத்து விடவில்லை.

{(நபியே! அவர்களிடம்) நீங்கள் கூறிவிடுங்கள்: "வேதத்தையுடையோரே! நமக்கும் உங்களுக்குமிடையே ஒரு சமத்துவமான வார்த்தையின் பக்கம் வாருங்கள்; (அதாவது) நாம் அல்லாஹ்வைத் தவிர வேறெவரையும் வணங்க மாட்டோம்; அவனுக்கு எவரையும் இணைவைக்க மாட்டோம்; அல்லாஹ்வை விட்டு நம்மில் சிலர் சிலரைக் கடவுள்களாக

எடுத்துக் கொள்ள மாட்டோம்". (முஃமின்களே! இதன் பிறகும்) அவர்கள் புறக்கணித்து விட்டால்: "நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் (; அல்லாஹ் ஒருவனுக்கே சரணடைந்தவர்கள்) என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருங்கள்!".} [3:64]

மேற்படி ஆயத் மதங்களுக்கு இடையில் நெருக்கத்தை உருவாக்குதல் என்ற சிந்தனை தவறானது என்பதற்கு ஆதாரமாக இருக்கின்றது.

முஹம்மத்ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சி பகருவதற்கான ஆதாரம்:

{(முஃமின்களே!) நிச்சயமாக உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார்; நீங்கள் கஷ்டத்திற்குள்ளாவது அவருக்கு கடினமாக இருக்கிறது. உங்(கள் நலன்)களில் அவர் பேராவல் கொண்டவராக இருக்கிறார்; இன்னும் முஃமின்கள் மீது மிக்க கருணையும் அன்பும் உடையவராக இருக்கின்றார்.} [9:128]

நூலாசிரியர் ஆதாரமாக குறிப்பிட்டுள்ள இந்த ஆயத்தில் மூன்று விதமாக அல்லாஹ் இந்த சாட்சியத்தை உறுதிப்படுத்தியுள்ளான். அவை: இந்த அரபி வசன நடையில் உள்ள மறைமுகமான சத்தியம், "லாம்", "கத்" ஆகிய சொற்கள்.

முஹம்மத்ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சி கூறுவதின் அர்த்தம்:

அவர்கள் ஏவியதில் அவர்களுக்கு வழிப்படுவது, அவர்கள் சொல்லிய விடயங்களில் அவர்களை உண்மைப்படுத்துவது, அவர்கள் தடுத்தவற்றிலிருந்து விலகிக் கொள்வது, அவர்கள் மார்க்கமாகக் காட்டித்தந்த வழிமுறையில் மாத்திரமே அல்லாஹ்வை வணங்குவது.

நூலாசிரியர் "முஹம்மத் ரசூலுல்லாஹ்" என்ற சாட்சியத்தின் கருத்தை விளக்கியுள்ளார். ஒவ்வொரு முஸ்லிமான ஆணும் பெண்ணும் இந்த சாட்சியத்தை உறுதி செய்ய வேண்டுமானால் அவர் குறிப்பிட்ட நான்கு விடயங்களையும் கடைபிடிப்பது அவசியமாகும்.

முஹம்மத் ரஸூலுல்லாஹ் என்று சாட்சி பகர்வதின் தாற்பரியம் யாதெனில்: அவர்கள் ஒரு அடிமை; அவர் வணங்கப்படக்கூடாது, மேலும் அவர்கள் ஒரு தூதர்; அவர் பொய்ப்பிக்கப்படக் கூடாது. இதன் கருத்துப்பொருள் பின்வருமாறு:

1-அவர்கள் கட்டளையிட்ட அனைத்திலும் அவர்களுக்கு நாம் வழிப்பட வேண்டும்; ஏனெனில், அவர்கள் அல்லாஹ்விடமிருந்து எத்திவைப்பவர்.

2-அவர்கள் சொன்னவற்றில் அவர்களை உண்மைப்படுத்த வேண்டும்; ஏனெனில், அவர்கள் உண்மையாளரும் மெய்ப்பிக்கப்பட்டவரும் ஆவார்கள்.

3-அவர்கள் தடுத்தவற்றிலிருந்து தூரமாக வேண்டும்; அதாவது நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் தடுத்தவை ஒரு பக்கத்திலும் நீர் அதற்கு எதிர்ப்பக்கத்திலும் இருக்க வேண்டும்.

4-நபிகளார் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் வழிகாட்டிய முறையிலேயே அன்றி அல்லாஹ்வை வணங்கக் கூடாது. இது "பித்அத்" (மார்க்கத்தின் பெயரில் உருவாக்கப்பட்டதை) செய்பவர்களுக்கு மறுப்பாக இருக்கிறது.

> தொழுகை மற்றும் ஸகாத்திற்கான ஆதாரமும் தௌஹீதின் விளக்கமும் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றில் காணப்படுகின்றன:
> {அல்லாஹ்வுக்கு வழிபாட்டை தூய்மையாக்கியவர்களாக (தவறான வழிகளிலிருந்து விலகி நிலையான ஏகத்துவ வழியின் பக்கம்) சாய்ந்தவர்களாக அல்லாஹ்வை அவர்கள் வணங்க வேண்டும்; மேலும் தொழுகையை நிலைநாட்டி, ஸகாத்தை நிறைவேற்றிவர வேண்டும் என்றே தவிர அவர்களுக்குக் கட்டளையிடப்படவில்லை. இதுதான் நிலையான மார்க்கமாகும்.} [98:5]

இரண்டாவது தூண்: தொழுகை:

அதன் வரைவிலக்கணம்: தக்பீரை கொண்டு ஆரம்பித்து ஸலாமை

கொண்டு முடிவடையும் செயல்கள் மற்றும் சொற்கள் மூலம் அல்லாஹ்வை வணங்குவதாகும்.
அது மார்க்கத்தின் அடித்தளமாகும்-தூணாகும். நபிகள் நாயகம் - ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் விண்ணுலகிற்கு மிஃராஜ் பயணம் செய்திருந்த சந்தர்ப்பத்தில் அல்லாஹ்விடம் இருந்து அவர்களுக்கு அது நேரடியாக கடமையாக்கப்பட்டது.

மூன்றாவது தூண்: ஸகாத்:

மொழி வழக்கில்: வளர்ச்சி, சுத்தம்.

அது இரு வகை: உடலின் ஸகாத் (பி(f)த்ர்), செல்வத்தின் ஸகாத்.

நோன்பிற்கான ஆதாரம் அல்லாஹ்வின் (பின்வரும்) கூற்றாகும்:
{ஈமான் கொண்டவர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் அது விதிக்கப்பட்டுள்ளது; (அதனால்) நீங்கள் இறையச்சமுடையோர் ஆகலாம்.} [2:183]

நான்காவது தூண்: நோன்பு:

**மொழி வழக்கில்:** தடுத்து கொள்ளல் / பிடித்து கொள்ளல்.
**மார்க்க வழக்கில்:** பஜ்ர் உதயமானதிலிருந்து சூரியன் மறையும் வரை நீய்யத் (நாட்டத்)துடன் நோன்பை முறிக்கும் காரியங்களிலிருந்து (தன்னை) தடுத்துக் கொள்வதன் மூலம் அல்லாஹ்வை வணங்குதல்.

மிகச்சிறந்த வணக்க வகைகளில் நோன்பும் ஒன்றாகும்; ஏனெனில், பொறுமையின் மூன்று வகைகளும் அதிலே ஒருசேர காணப்படுகின்றன. அதன் மகத்துவத்தை குறிக்கும் அம்சங்களில் ஒன்று தான் அல்லாஹ் அதற்குரிய கூலியை தானே தருவதாக சொல்லி இருப்பது.

ஹஜ்ஜிக்கான ஆதாரம் அல்லாஹ்வின் (பின்வரும்) கூற்று:
{அந்த (கஃபஹ்) ஆலயத்திற்கு (செல்வதற்கு)ரிய பாதையில் பயணிக்க சக்தி பெற்ற மனிதர்களுக்கு அல்லாஹ்வுக்காக அதை (நாடிச்சென்று) ஹஜ் செய்வது கடமையாகும். எவரேனும் (இதை) நிராகரித்தால் நிச்சயமாக அல்லாஹ் உலகத்தாரை விட்டும் நிறைவடைந்தவனாக (தேவையற்றவனாக) இருக்கின்றான்.} [3:97]

ஐந்தாவது தூண்: ஹஜ்:
**மொழிவழக்கில்:** நாடுதல்.
**மார்க்க வழக்கில்:** முஸ்தபா -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் வழி முறையில் இடம்பெற்றிருப்பதற்கு ஏற்ப ஹஜ் கிரிகைகளை நிறைவேற்றுவதன் மூலம் அல்லாஹ்வை வணங்குதல்.
வாழ்நாளில் ஒரு முறையேனும் ஒவ்வொரு முஸ்லிமும் ஹஜ்ஜை நிறைவேற்றுவது கடமையாகும்.

இரண்டாவது படித்தரம்: ஈமான் (நம்பிக்கை). அது எழுபதுக்கு மேற்பட்ட கிளைகளை கொண்டதாகும். அவற்றில் உயர்ந்த கிளை: "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற வார்த்தையாகும். அவற்றில் தாழ்ந்த கிளை பாதையிலிருந்து தீங்கு ஏற்படுத்துவதை அகற்றுவதாகும். நாணமும் ஈமானின் ஒரு கிளையாகும்.
**அதன் தூண்கள் ஆறு:**
அல்லாஹ்வையும், வானவர்களையும், வேதங்களையும், தூதர்களையும், மறுமை நாளையும், நல்ல-கெட்ட விதியையும் நம்பிக்கை கொள்வது.
மேற்படி ஆறு தூண்களுக்குமான ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் வார்த்தையாகும்:
{புண்ணியம் என்பது உங்கள் முகங்களைக் கிழக்கு நோக்கியோ மேற்கு நோக்கியோ திருப்புவதல்ல! ஆனால் புண்ணியம் என்பது எவர் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் (மறுமை நாளையும்), மலக்குகளையும், வேதங்களையும், நபிமார்களையும், நம்பிக்கை கொள்கிறாரோ அவர் (செய்யும் புண்ணியம்) தான்.} [2:177]
விதியின் ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் வார்த்தையாகும்:
{நாம் ஒவ்வொன்றையும் விதியின்படி (தீர்மானிக்கப்பட்ட நிலையில்) நிச்சயமாக படைத்திருக்கின்றோம்.} [54:49]

இரண்டாம் படித்தரம்: ஈமான் / நம்பிக்கை
**மொழி வழக்கில்:** ஏற்றுக்கொள்ளல்/ அங்கீகரித்தல்.

**மார்க்க வழக்கில்:** நாவினால் மொழிவதாகவும், உள்ளத்தினால் நம்பிக்கை கொள்வதாகவும், உடலுறுப்புகளாலும் உள்ளத்தாலும் செயல்படுத்துவதாகவும், வழிப்பாடு செய்வதால் அதிகரிப்பதாகவும், பாவம் செய்வதால் குறைவடைவதாகவும் இருக்கும்.

ஈமானின் மார்க்க ரீதியான வரைவிலக்கணத்தில் மேற்குறிப்பிடப்பட்ட ஐந்து அம்சங்களும் உள்ளடங்குவது அவசியமாகும். வரைவிலக்கணத்தில் அவற்றில் ஒன்றேனும் விடுபட்டால் அஹ்லுஸ் ஸுன்னஹ் வல் ஜமாஅத்தினர் ஈமானுக்கு வழங்கும் வரைவிலக்கணமாக அது அமையாது.

இந்த ஐந்து விடயங்களுக்கான ஆதாரம் என்ன?

**((... அவற்றில் (ஈமானின் கிளைகளில்) உயர்ந்தது "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற வார்த்தையாகும்.))** என நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் கூறினார்கள்.

இதுவே நாவால் மொழிவதும் ஈமானில் அடங்கும் என்பதற்கு ஆதாரமாகும்.

**((அவற்றில் தாழ்ந்தது பாதையை விட்டும் தீங்கு விளைவிக்கக்கூடியதை அகற்றுவதாகும்))** என்று கூறினார்கள். இதுவே உறுப்புக்களின் செயல்களும் ஈமானில் அடங்கும் என்பதற்கு ஆதாரமாகும்.

**((நாணம்))** உள்ளத்தால் ஏற்படும் ஒரு செயலாகும்.

{இது (இந்த ஸூரஹ்) உங்களில் எவருடைய ஈமானை அதிகரித்தது} [9:124] என்று அல்லாஹ்வின் கூற்றில் இடம்பெற்றுள்ளது. இந்த ஆயத் ஈமான் அதிகரிக்கும் என்பதற்கு ஆதாரமாக அமைந்துள்ளது. அது அதிகரிக்கக் கூடியதாக இருந்தால் குறைவடைவதும் கட்டாயமாகும். அதேபோன்று மார்க்கத்தில் குறைவு ஏற்படும் என்பது நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களுடைய பின்வரும் கூற்றில் தெளிவாக இடம் பெற்றுள்ளது. **((சிந்திப்பதிலும் மார்க்கத்திலும் குறைவானவர்களாக அவர்களைவிட எவரையும் நான் காணவில்லை.))** எனவே மார்க்கம் (ஈமான்) குறைவடையவும் செய்யும்.

**ஈமானின் தூண்கள் ஆறாகும்:**
1- அல்லாஹ்வை ஈமான் கொள்ளுதல்
2- வானவர்களை ஈமான் கொள்ளுதல்
3- வேதங்களை ஈமான் கொள்ளுதல்
4- தூதர்களை ஈமான் கொள்ளுதல்
5- இறுதி நாளை ஈமான் கொள்ளுதல்
6- நலவும் கெடுதியும் விதியின் அடிப்படையில் ஏற்படுவதை ஈமான் கொள்ளுதல்

**முதலாவது தூண்: அல்லாஹ்வை ஈமான் கொள்ளல். இது நான்கு விடயங்களை வேண்டி நிற்கிறது:**
1- அல்லாஹ் ஒருவன் இருக்கிறான் என்று ஈமான் கொள்ளுதல்.
2- தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்வை ஈமான் கொள்ளுதல்
3- தவ்ஹீதுல் உலூஹிய்யஹ்வை ஈமான் கொள்ளுதல்
4- தவ்ஹீதுல் அஸ்மா வஸ்ஸிஃபாத்தை ஈமான் கொள்ளுதல்

**அல்லாஹ் இருக்கிறான் என்ற ஈமான் நான்கு விடயங்கள் மூலம் ஏற்படும்:**
1-புத்தி/பகுத்தறிவு மூலம்:
படைப்பாளன் ஒருவன் இல்லாது படைக்கப்பட்ட ஒன்று இருப்பதை கற்பனை செய்வதை பகுத்தறிவு ஏற்றுக்கொள்ளாது.
{அவர்கள் எதுவுமின்றி படைக்கப்பட்டார்களா? அல்லது அவர்கள் படைப்பவர்களா?} [52:35]
2-புலன்கள் மூலம்:
நீ கஷ்டத்திலும் துன்பத்திலும் இருக்கும்பொழுது உன் இரு கரங்களையும் வானத்தை நோக்கி உயர்த்தி என் இறைவனே! என்று பிரார்த்திப்பீர். அப்போது அல்லாஹ்வின் உதவியால் உன்னுடைய கஷ்டங்கள் நீங்குவதை அவதானிக்கின்றீர்.
3-(மாசுபடாத) இயல்புத் தன்மை:
**((பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் இயல்பான தன்மையிலேயே பிறக்கின்றது. அதன் பெற்றோர்களே அதனை யூதனாகவோ, கிறிஸ்தவனாகவோ, நெருப்பு வணங்கியாகவோ மாற்றுகிறார்கள்.))**
4-மார்க்கத்தின் மூலம்:
"அல்லாஹ்வின் வேதத்திலுள்ள ஒவ்வொரு வசனத்திலும் ஏகத்துவத்திற்கு ஆதாரம் இருக்கின்றது" என்று இப்னுல் கைய்யிம் -ரஹிமஹுல்லாஹ்- குறிப்பிடுகிறார்.

## இரண்டாவது தூண்: வானவர்களை ஈமான் கொள்ளல்.

வானவர்கள் மறைமுகமான ஒரு உலகம். அல்லாஹ் அவர்களை ஒளியிலிருந்து படைத்திருக்கின்றான். அல்லாஹ்வுக்கு அவர்கள் எப்போதும் வழிப்படுவார்கள். அவனுக்கு மாறு செய்ய மாட்டார்கள். அவர்களுக்கு ஆத்மாக்கள் உள்ளன.

{ரூஹுல் குதுஸ் (என்னும் பரிசுத்த ஆத்மா- ஜிப்ரீல்)}. [16:102]

அவர்களுக்கு உடல்களும் உள்ளன.

{இரண்டிரண்டும், மும்மூன்றும், நன்னான்கும் இறக்கை உள்ளவர்களாக மலக்குகளைத் தன் தூதை எடுத்துச் செல்வோராக ஆக்கினான்; தான் நாடியதைப் படைப்பிலே மிகுதப்படுத்துவான்.} [35:1]

அவர்களுக்கு பகுத்தறிவும் இதயங்களும் உள்ளன.

{அ(வ்வான)வர்களின் இருதயங்களிலிருந்து திடுக்கம் நீக்கப்படுமானால் "உங்கள் இறைவன் என்ன கூறினான்" என்று கேட்பார்கள்.} [34:23]

அவர்களை நம்புகிறோம். அதேபோன்று அல்லாஹ் எங்களுக்கு அறிவித்து தந்திருக்கக்கூடிய ஜிப்ரீல், மீகாஈல், இஸ்ராஃபீல் போன்ற அவர்களின் பெயர்களையும் {அல்லாஹ் அவர்களை ஏவிய எதிலும் அவர்கள் அவனுக்கு மாறு செய்ய மாட்டார்கள்; தாங்கள் ஏவப்பட்டபடியே அவர்கள் செய்து வருவார்கள்.} [66:6] போன்ற அவர்களின் பண்புகளையும் "அர்ஷை சுமப்பவர்கள்" போன்ற அவர்களின் செயல்பாடுகளையும் அவர்கள் சம்பந்தமாக வந்திருக்கக்கூடிய செய்திகளையும் சுருக்கமாகவும் விரிவாகவும் நம்புகிறோம்.

## மூன்றாவது தூண்: வேதங்களை ஈமான் கொள்ளுதல்.

அவை அல்லாஹ்வின் எதார்த்தமான வார்த்தைகள் என்றும் அவை இறக்கியருளப்பட்டவை; படைக்கப்பட்டவை அல்ல என்றும் அல்லாஹ் ஒவ்வொரு தூதருடனும் ஒரு வேதத்தை இறக்கியருளினான் என்றும் நாம் நம்பிக்கை கொள்வது கட்டாயமாகும். அவ்வேதங்களை நாம் நம்புகிறோம். அதேபோன்று அல்லாஹ் எங்களுக்கு அறிவித்துத் தந்திருக்கின்ற அவ்வேதங்களின் பெயர்களையும் அவற்றின் செய்திகளையும் அவற்றின் மாற்றப்படாத சட்டங்களையும் சுருக்கமாகவும் விரிவாகவும் ஈமான் கொள்கிறோம். அல்குர்ஆன் அதற்கு முன்னால் அருளப்பட்ட அனைத்து வேதங்களின் சட்டங்களையும் செல்லுபடியற்றதாக மாற்றிவிட்டது என்றும் நம்புகிறோம். அவை: தவ்றாத், இஞ்ஜீல், ஸபூர், ஸுஹ்ஃபு இப்ராஹீம், ஸுஹ்ஃபு மூஸா –அலைஹிமஸ்ஸலாம்-.

## நான்காவது தூண்: தூதர்களை (ரஸூல்களை) ஈமான் கொள்ளுதல்.

அவர்கள் மனிதர்கள்; இறைவனுக்கு இருக்கும் எந்த ஒரு தனித்துவமான பண்பும் அவர்களிடத்தில் இல்லை என்றும், அவர்கள் அல்லாஹ்வின் அடிமைகள்; வணக்கத்திற்குத் தகுதியற்றவர்கள், வணங்கப்படக்கூடாதவர்கள் என்றும், அல்லாஹ் அவர்களை தூதர்களாக (தேர்வுசெய்து) அனுப்பி, அவர்களுக்கு இறைச் செய்தியை அறிவித்து, அத்தாட்சிகள் மூலமாக அவர்களுக்கு உதவி செய்தான் என்றும், அவர்கள் அவ்வமானிதத்தை நிறைவேற்றினார்கள் என்றும், உம்மத்துக்கு நலவு நாடினார்கள் என்றும், (தூதை) எத்திவைத்தார்கள் என்றும், அல்லாஹ்வுக்காக உண்மையாகவே போராடினார்கள் என்றும் நம்புவது எமது கடமையாகும்.

அவர்களை நாம் ஈமான் கொள்ள வேண்டும். அதேபோன்று அல்லாஹ் எமக்கு அறிவித்துத் தந்திருக்கின்ற அவர்களின் பெயர்கள், பண்புகள், அவர்களின் செய்திகள் ஆகியவற்றையும் சுருக்கமாகவும் விரிவாகவும் ஈமான் கொள்ள வேண்டும். நபிமார்களில் முதலாமவர் ஆதம் –அலைஹிஸ்ஸலாம்- என்றும், தூதர்களில் முதலாமவர் நூஹ் –அலைஹிஸ்ஸலாம்- என்றும், நபிமார்களிலும் தூதர்களிலும் இறுதியானவர் முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் என்றும், ஆரம்பகாலத்தில் அருளப்பட்ட எல்லா ஷரீஅத்களும் – மார்க்க சட்டங்களும் முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் ஷரீஅத்தின் மூலமாக மாற்றப்பட்டுவிட்டன என்றும் நம்ப வேண்டும். அவர்களில் உலுல் அஸ்(z)ம் – தீர்க்கம்/உறுதி உடையவர்கள் ஐவர். அஷ்-ஷூறா, அல்-அஹ்ஸாப் ஆகிய இரு அத்தியாயங்களும் அவர்களைப் பற்றி கூறுகின்றன. அவர்கள்: **முஹம்மத்** -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்-, **நூஹ்** –அலைஹிஸ்ஸலாம்-, **இப்ராஹீம்** –அலைஹிஸ்ஸலாம்-, **மூஸா**-அலைஹிஸ்ஸலாம்-, **ஈஸா** –அலைஹிஸ்ஸலாம்- ஆகியோர்.

## ஐந்தாவது தூண்: இறுதி நாளை ஈமான் கொள்ளுதல்.

மரணத்திற்குப் பிறகு நடக்க இருப்பதாக நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களால் அறிவித்துத் தரப்பட்டிருக்கும் அனைத்தையும் நம்புவதை அது உள்ளடக்கும்.

உதாரணமாக: மண்ணறை-கப்ரின் சோதனை, ஸூர் ஊதுவது, மனிதர்கள் மண்ணறைகளிலிருந்து எழும்புவது, மீஸா(z)ன் – தராசுகள், ஸிறாத் – பாலம், ஹவல் - நீர்த்தடாகம், ஷபாஅஹ் – பரிந்துரை, சுவனம், நரகம், முஃமீன்கள் தங்களுடைய இறைவனை கியாமத் நாளிலும் சுவனத்திலும் பார்ப்பது. இன்னும் பல மறைவான விடயங்கள்.

**ஆறாவது தூண்: நலவும் கெடுதியும் விதியின் அடிப்படையிலேயே நடக்கிறன என்று ஈமான் கொள்ளுதல்.**

இத் தூண் கட்டாயமாக நான்கு விடயங்களை நம்புவதை உள்ளடக்க வேண்டும்:

1-அறிவு: ஒவ்வொன்றையும் அல்லாஹ் மொத்தமாகவும் விரிவாகவும் அறிந்து வைத்துள்ளான் என்று ஈமான் கொள்ளுதல்.

2-எழுத்து: மறுமை நாள் வரை உள்ள ஒவ்வொன்றினதும் விதிகளை அல்லாஹ் எழுதி வைத்திருக்கிறான் என்று ஈமான் கொள்ளுதல்.

3-நாட்டம்: அல்லாஹ் நாடியது நடந்தது, அவன் நாடாதது நடக்கவில்லை என்றும், அடியானுக்கு ஒரு நாட்டம் இருக்கிறது ஆனாலும் அது அல்லாஹ்வின் நாட்டத்திற்கு கீழ் (உட்பட்டதாக) இருக்கிறது என்றும் ஈமான் கொள்ளுதல்.

4-படைத்தல்: அடியானும் அவனுடைய செயல்பாடுகளும், அதேபோன்று அல்லாஹ் தவிர அனைத்தும் படைக்கப்பட்டவையே என்று ஈமான் கொள்ளுதல். ஆதாரம்: {அல்லாஹ் அனைத்தையும் படைத்தவன்.} [39:62], {மேலும், அல்லாஹ் உங்களையும் நீங்கள் செய்கின்றவற்றையும் படைத்தான்.} [66:6]

மூன்றாவது படித்தரம்: இஹ்ஸான்: அது ஒரே ஒரு தூணை கொண்டது. அதுதான் நீ அல்லாஹ்வைப் பார்ப்பதைப் போன்று அவனை வணங்க வேண்டும்; நீ அவனை பார்க்காவிட்டாலும் நிச்சயமாக அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். ஆதாரம்: பின்வரும் அல்லாஹ்வின் கூற்றுகளாகும்:

{நிச்சயமாக பயபக்தியுடையவர்களாகவும் நற்செயல் புரிகின்றவர்களாகவும் இருக்கிறவர்களுடன் அல்லாஹ் இருக்கிறான்.} [16:128]

{இன்னும், அருள் மிக்கவனாகிய (யாவரையும்) மிகைத்தவன் மீது (உமது காரியங்களை ஒப்படைத்து, பொறுப்புச் சாட்டி) தவக்குல் வைப்பீராக! அவன், நீர் (வணங்குவதற்காக) நிற்கும்போதும் ஸஜ்தா செய்வோருடன் நீர் இயங்குவதையும் பார்க்கிறான். நிச்சயமாக அவன் செவியேற்பவன், மிக அறிபவன். [26:217-220]

(உம்மை நாம் கவனித்தவர்களாக இருந்தே அன்றி நபியே) நீர் ஒரு விடயத்தில் ஈடுபடவும் மாட்டீர், குர்ஆனிலிருந்து நீர் எதையும் ஓதவும் மாட்டீர், (முஃமின்களே) நீங்களும் எந்தச் செயலையும் செய்ய மாட்டீர்கள், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போது உங்களை நாம் கவனித்தவர்களாக இருந்தே அன்றி. [10:61]

**மூன்றாம் படித்தரம்: இஹ்ஸான்.** அது மார்க்கத்தின் படித்தரங்களில் மிகவும் உயர்ந்தது. அதற்கு ஒரு தூண் இருக்கின்றது. அதன் கீழ் இரண்டு **படித்தரங்கள்** (درجة) காணப்படுகின்றன. அவை:

1-இபாததுல் முஷாஹதஹ் (مشاهدة) - பார்க்கும் உணர்வோடு வணங்குவது.

அதுதான் அல்லாஹ்விடம் இருப்பவற்றில் நேசமும் ஆசையும் ஆர்வமும் கொண்டு வணங்குதல்.

உதாரணம்: நபிமார்கள் மற்றும் தூதர்களின் வணக்கம். ஏனையவர்களும் இந்த தரத்தை அடைய முடியும்.

இதன் அர்த்தம் இந்த தரத்தில் உள்ளவர் வெறும் அல்லாஹ்வுக்கு நேசம் கொண்டு மட்டுமே இருக்கிறார்; அவனைப் பற்றிய அச்சம் அவரிடத்தில் இல்லை என்பது அர்த்தமல்ல. ஆனாலும் இந்தத் தரத்தில் வணக்கம் செய்வதற்கு அடியானை மிகப் பலமாகத் தூண்டக்கூடியது அல்லாஹ்வுடைய நேசமேயாகும். இதனால் தான் நபிகள் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் கூறினார்கள்: **((நான் நன்றியுள்ள அடியானாக இருக்கக் கூடாதா?))**

2-இபாததுல் முராகபஹ் (مراقبة) - கண்காணிக்கப்படும் உணர்வோடு வணங்குவது.

அதுதான் பயந்து அச்சப்பட்டு வணங்குவது. இந்த தரத்திலிருந்து எந்த ஒரு முஸ்லிமும் வெளியாகி விட முடியாது.

சுன்னஹ்வில் இடம்பெற்றுள்ள ஆதாரம்: பிரபல்யமான ஜிப்ரீல் -அலைஹிஸ்ஸலாம்- அவர்களின் ஹதீஸாகும்.
உமர் -ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்: நாங்கள் ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் அருகில் இருந்தபோது தூய

வெண்ணிற ஆடை அணிந்த, அடர் கறுப்பு நிறத்தில் தலைமுடி உடைய ஒரு மனிதர் வந்தார். பயணத்தில் வந்த எந்த அடையாளமும் அவரிடம் காணப்படவில்லை; எங்களில் எவருக்கும் அவரை (யார் என)த் தெரிய வில்லை. அவர் நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் அருகில் (சென்று), தம் முழங்கால்களை நபியவர்களின் முழங்கால்களோடு இணைத்துக்கொண்டு (நெருக்கமாக) அமர்ந்தார். அவர் தம் கைகளைத் தம் தொடைகள் மீது வைத்தார். பிறகு முஹம்மதே! இஸ்லாம் (அடிபணிதல்) என்றால் என்ன என்று எனக்குத் தெரிவியுங்கள் என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், ((இஸ்லாம் என்பது, அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் எவரும் இல்லை என்றும், முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் என்றும் நீங்கள் உறுதி கூறுவதாகும். மேலும், தொழுகையைக் கடைப்பிடிப்பதும், ஸகாத்தை வழங்கிவருவதும், ரமலான் மாதத்தில் நோன்பு நோற்பதும், நீர் அந்த (கஃபஹ்) ஆலயத்திற்கு(ச் செல்வதற்கு)ரிய பாதையில் பயணிக்க சக்தி பெற்றிருந்தால் அதை (நாடிச்சென்று) ஹஜ் செய்வதுமாகும்)) என்று பதிலளித்தார்கள். அதற்கு (அம்மனிதர்:) உண்மையே கூறினீர் என்றார்.

அவர் விடயத்தில் நாங்கள் வியப்படைந்தோம். (ஏனெனில்) அவரே நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களிடம் கேள்வி கேட்டுவிட்டு, அவரே அவர்களை (அவர்கள் அளித்த பதிலுக்காக) உண்மைப்படுத்துகிறார்.

அடுத்து அவர், ஈமான் (நம்பிக்கை) பற்றி எனக்குத் தெரிவியுங்கள் என்று கூறினார். அதற்கு நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், ((அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும், இறுதி நாளையும், நீங்கள் நம்புவதாகும்; நன்மை, தீமை அனைத்தும் விதியின்படியே நடக்கின்றன என்றும் நீங்கள் நம்புவதுமாகும்)) என்று கூறினார்கள். (அதற்கும் அம்மனிதர்:) உண்மைதான் என்றார்.

அடுத்து (அம்மனிதர்), இஹ்ஸான் (அழகிய முறையில் செயலாற்றல்) பற்றி எனக்குத் தெரிவியுங்கள் என்றார். அதற்கு நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், (( (இஹ்ஸான் என்பது:) அல்லாஹ்வை நீங்கள் பார்த்துக் கொண்டிருப்பதைப் போன்ற (உணர்வுடன்) அவனை வணங்குவதாகும். ஏனெனில், அவனை நீங்கள் பார்க்கவில்லை என்றாலும், அவன் உங்களைப் பார்க்கின்றான்.)) என்று பதிலளித்தார்கள்.

(அம்மனிதர்), (உலக அழிவு) நேரத்தை பற்றி (அது எப்போது வரும் என) எனக்குத் தெரிவியுங்கள் என்று கேட்க, நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், ((கேள்வி கேட்கப்படுபவர் (அதாவது நான்), கேட்பவரைவிட (அதாவது உங்களைவிட) மேலதிகமாக அறிந்தவர் அல்லர். (இது பற்றி எனக்கும் தெரியாது; உங்களுக்கும் தெரியாது).)) என்று கூறினார்கள்.

(அம்மனிதர்), மறுமை நாளின் அடையாளங்களைப் பற்றி எனக்குத் தெரிவியுங்கள்! என்று கேட்டார். அதற்கு நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், ((ஓர் அடிமைப் பெண் தன் எசமானியைப் பெற்றெடுப்பதும், நிர்வாணமான (அரைகுறை ஆடைகளை அணிந்துள்ள) ஏழைகளான ஆட்டு இடையர்களான காலில் செருப்பில்லாதவர்கள் போட்டி போட்டுக்கொண்டு உயரமான கட்டடங்கள் கட்டுவதை நீங்கள் காண்பதும் ஆகும்)) என்று கூறினார்கள்.

பிறகு (அம்மனிதர்) சென்றுவிட்டார். நீண்ட நேரம் நான் (அங்கேயே) இருந்தேன். பின்னர் என்னிடம் நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், ((உமரே! கேள்வி கேட்டவர் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?)) என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள் என்று சொன்னேன். நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள், ((அவர்தாம் (வானவர்) ஜிப்ரீல். உங்களுக்கு உங்களது மார்க்கத்தைக் கற்றுத் தருவதற்காக உங்களிடம் அவர் வந்தார்)) என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இஸ்லாம், ஈமான், இஹ்ஸான் ஆகியவற்றின் தூண்களுக்கு ஆதாரமாக அமைந்துள்ளது.

((வினவியவரை விட வினவப்பட்டவர் மேலதிகமாக எதையும் அறிந்தவராக இல்லை)) என்ற நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் கூற்றில் யுகமுடிவு நேரத்தை அல்லாஹ்வைத் தவிர எவரும் அறிய மாட்டார் என்பதற்கு ஆதாரம் இருக்கிறது.

((அடிமைப்பெண் தன் எசமானியை பெற்றெடுப்பாள்)) என்ற நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் கூற்றுக்குக் கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்கள்:

1- பெற்றோரைத் துன்புறுத்துவது அதிகரிக்கும்.
2- அடிமைப்படுத்துதல் அதிகரிக்கும்.
3- நிலைமைகள் நேர் மாற்றமடையும்.
4- அரசன் ஒரு அடிமைப் பெண்ணை மணப்பான்; அவள் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பாள்; இந்த ஆண் குழந்தை தன் தந்தையின் மரணத்திற்குப் பிறகு அரசனாகவும் தன் தாய்க்கு எசமானாகவும் மாறுவான்.

((நிர்வாணமான ஏழைகளான ஆட்டு இடையர்களான காலில் செருப்பில்லாதவர்கள் போட்டி போட்டுக்கொண்டு உயரமான கட்டடங்கள் கட்டுவதை நீங்கள் காண்பது)) என்பதன் அர்த்தம் நிலைமைகள் நேர்மாற்றமடையும்; அதாவது ஏழ்மை நிலை அளவுகடந்த செல்வ நிலைக்கு மாறும் என்பதாகும்.

### ஜிப்ரீல் -அலைஹிஸ்ஸலாம்- அவர்களின் ஹதீஸில் இருந்து பெறப்படும் பயன்கள்:

1- மாணவனின் கடமைகள். மாணவன் மீது ஆறு வகையான கடமைகள் காணப்படுகின்றன: தனக்குச் செய்யவேண்டிய கடமை, தன் ஆசான்களுக்குச் செய்யவேண்டிய கடமை, தான் கற்கும் இடத்திற்குச் செய்ய வேண்டிய கடமை, சக கல்வி தோழர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை, தன்னுடைய புத்தகத்துக்குச் செய்ய வேண்டிய கடமை, தான் கற்றுக்கொள்ளும் கல்விக்குச் செய்ய வேண்டிய கடமை.

- **தனக்குச் செய்ய வேண்டிய கடமைகள்:** கல்வி என்பது ஒரு வணக்கமாகும். -எனவே அதில் "இஹ்லாஸ்" மற்றும் நபி வழியைப் பின்பற்றுவது அவசியமாகும்.-, அடிப்படையான வழியில்

ஸலபியாக இரு, எப்போதும் (அல்லாஹ்வால்) கண்காணிக்கப்படுகிறோம் என்ற உணர்வு, பணிவு; பெருமையற்ற தன்மை (ஆகியவற்றைக் கடைபிடி).
(அல்லாஹ் தந்திருப்பதை) போதுமென பொருந்திக் கொள்ளுதல், உலகப் பற்றற்ற தன்மை, அறிவின் பிரகாசம்/அழகு மூலம் அலங்கரித்துக் கொள்ளுதல், உயர் பழக்கவழக்கங்கள், (வீரம், வலிமை, துணிவு, நல்ல காரியத்திற்காக செலவிடுதல் போன்ற) ஆண்மைக்குறிய பண்புகளை கடைபிடித்தல், வளமான செல்வச் செழிப்பான வாழ்க்கை முறையை கைவிடுதல், (இலகுவான மற்றும் வன்முறையற்ற) மென்மையை அணிகலனாக ஆக்கிக் கொள்ளுதல், நிலையாக இருத்தல், உறுதிப்படுத்திக் கொள்ளல் (அவசரப்படாமல் இருத்தல்).
சாதித்து முடிக்க வேண்டும் என்ற உறுதியான எண்ணம், கல்வித் தேடலில் பேராசை, கல்வியைப் பெறுவதற்காக பயணம் செய்தல், கற்பதைக் குறித்துக் கொள்ளல், (செயல்படுத்துவதன் மூலம்) கல்வியைப் பேணிப் பாதுகாத்துக் கொள்ளல், மனனம் செய்ததை மீட்டிக்கொள்ளுதல், பிக்ஹ் மஸ்அலஹ்களை உஸூலுல் பிக்ஹ் விதிகளுடன் ஒப்பீடு செய்து புரிந்து கொள்ளுதல், அல்லாஹ்வின் பக்கம் ஒதுங்குதல், கல்வியில் அமானிதத்தைப் பேணுதல், உண்மை தன்மை (ஆகியவற்றைக் கடைபிடித்தல்).
கல்வியைத் தேடும் மாணவனின் கேடயம்: "எனக்குத் தெரியாது" என்பதாகும், -நேரம்- எனும் மூலதனத்தை பாதுகாத்தல், மனதுக்கு ஓய்வு கொடுத்தல் (அந்த ஓய்வு நேரத்தில் பல்வேறு துறைகளை பற்றி அறிந்து கொள்வதன் ஊடாக) -பொது அறிவை பெற்றுக்கொள்ளல்-, திறமையான ஒரு ஆசிரியரிடம் சரி செய்து கொள்ளும் நோக்கில் வாசித்தல் (قراة التصحيح والضبط), (கல்வியைக் கற்று நல்ல நிலைக்கு வந்ததற்குப் பிறகு) நீண்ட நூல்களை விரைவாக வாசித்துக் கொண்டு செல்லுதல் (جرد المطولات).
அழகிய முறையில் கேள்வி கேட்டு; நன்றாக செவிமடுத்து; முறையாகப் புரிந்து; செயற்படுத்தல், விதண்டாவாதம் செய்யாது வாதித்தல், கற்ற கல்வியை மீட்டல், குர்ஆன், சுன்னஹ் மற்றும் அவற்றின் கல்விகளுக்கு இடையே இருந்து கொள்ளல் வேண்டும், ஒவ்வொரு துறையிலும் அதன் அடிப்படைகளைப் பூரணமாக பெற்றுக்கொள்ள வேண்டும்.
கற்ற கல்வியை செயற்படுத்தல், தலைமைத்துவம்; பிரபல்யம்; இம்மை ஆகியவற்றின் ஆசைகளில் இருந்து விரண்டோடுதல்.
தன்னைப் பற்றி (மிகைத்த நல்லெண்ணம் வைக்காது) குறைத்து மதிப்பிடுதல், மற்றவர்களை பற்றி நல்லெண்ணம் வைத்தல்.

கல்விக்குரிய ஸகாத்தை நிறைவேற்றுவாயாக! -அதாவது சத்தியத்தை வெளிப்படையாக சொல்பவனாகவும், நன்மையை ஏவி, தீமையை தடுப்பவனாகவும், நலன்களையும் விளைவுகளையும் ஒப்பீடு செய்பவனாகவும், அறிவை பரப்புபவனாகவும், மற்றவர்களுக்கு பிரயோசனம் அளிப்பதை விரும்புபவனாகவும், அந்தஸ்தை பயன்படுத்தி உதவுபவனாகவும், சத்தியத்திற்காகவும் நல்ல விடயங்களுக்காகவும் ஏற்படும் சோதனைகளில் முஸ்லிம்களுக்கு அழகான முறையில் சிபாரிசு செய்பவனாகவும் இருந்துகொள்-.
கண்ணியமாக நடந்து கொள்ளுதல், அறிவைப் பாதுகாத்தல், மார்க்க அல்லது உலக நலன்களைக் கருத்திற்கொண்டு இணக்கப்பட்டு மென்மையாக நடந்து கொள்ளல். ஆனால் மார்க்கத்தை விட்டுக்கொடுத்து நடக்கக்கூடாது, அறியாத விடயத்தில் அறிந்தவனைப் போல நடிக்கக்கூடாது, தனக்குத் தகுதி ஏற்படுவதற்கு முன்னரே தலைமைவகித்தல்/முன்வருதல் கூடாது.
ஒரு அறிஞர் தவறுவிடும் பொழுதும், அறிஞர்களுக்கிடையே கருத்து வேறுபாடு ஏற்படும் பொழுதும் சரியான நிலைப்பாட்டை எடுத்தல், சந்தேகங்களை (ஏற்படுத்தும் விடயங்களை) தவிர்த்தல், ஒரு இயக்கத்தை அல்லது கட்சியை அடிப்படையாகக் கொண்டு நேசம் பாராட்டுவது அல்லது பகைப்பது என்ற கட்சி வாதம், இயக்கவாதம் இருக்கக்கூடாது.

**- ஆசானுக்கு செய்ய வேண்டிய கடமைகள்:** இந்த விடயத்தில் மனிதர்கள் இரு துருவங்களாகவும் நடுத்தரமாகவும் இருக்கிறார்கள். உலகில் முதல் முதலில் நடந்த இணைவைப்பு நல்லடியார்கள் விடயத்தில் அளவு கடந்ததன் விளைவாக ஏற்பட்டதாகும் என்பது இந்த நூலில் பின்னர் சுட்டிக்காட்டப்பட இருக்கின்றது. எனவே நல்லடியார்கள் விடயத்தில் நாம் நடுநிலையைப் பேணுவது அவசியம். அளவு கடந்து செல்வதோ தரக்குறைவு செய்வதோ கூடாது.

**மாணவன் தான் கற்கும் இடத்திற்கும் கடமை உள்ளவனாக இருக்கின்றான்.**

**தன்னோடு கற்கும் தோழர்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளும் உள்ளன:** அல்லாஹ் கூறுகிறான்: {மனிதர்களுக்காக தோற்றுவிக்கப்பட்ட சிறந்த சமூகமாக நீங்கள் இருக்கின்றீர்கள்.} [3:110]

நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் கூறினார்கள்: **((உங்களில் ஒருவர் தான் விரும்புவதை தன்னுடைய சகோதரனுக்கும் விரும்பும் வரை (முழுமையாக) ஈமான் கொண்டவராகமாட்டார்.))**

**தான் கற்கும் நூலுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உள்ளன:** அல்லாஹ் இந்த நூற்களை எங்களுக்கு அருட்கொடையாக வழங்கியுள்ளான். அவற்றை நாம் பாதுகாப்பது அவசியமாகும்.

**கல்விக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உள்ளன:** அதனை முறையாகக் கற்றல், மறந்துவிடாமல் எப்போதும் மீட்டல் செய்வது, அதனை செயற்படுத்துவது; ஏனெனில் யார் கற்றுக் கொள்கிறாரோ அவர் மீது அதை செயற்படுத்துவது கட்டாயமாகிவிட்டது, பின்னர் இந்தக் கல்வியின் பக்கம் மற்றவர்களை அழைப்பது; ஏனெனில் இது ஒரு அருட்கொடை. அதற்காக நன்றி செலுத்துவது அவசியமாகும்.

(மேற்படி ஜிப்ரீல் –அலைஹிஸ்ஸலாம்- அவர்களின் ஹதீஸிலிருந்து பெறப்படும் மேலதிக படிப்பினைகள்:)

2- கேள்வி கேட்பதின் ஒழுக்கங்களில் ஒன்றுதான் பயன் எதிர்பார்க்கப்படும் கேள்விகளை கேட்பது.

3- அறிவைத் தேடும் மாணவன் சிறந்த தோற்றத்தை / அமைப்பை பேணவேண்டும்.

4- நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் மரணித்திற்குப் பிறகு "அல்லாஹ்வும் ரஸூலும் மிக அறிந்தவர்கள்" என்று சொல்லக்கூடாது. "அல்லாஹ் மிக அறிந்தவன்" என்று மாத்திரமே சொல்ல வேண்டும்.

மூன்றாவது அடிப்படை: உங்களுடைய நபி முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களைப் பற்றி அறிந்து கொள்ளுதல்.

அவர்கள் ஹாஷிமுடைய மகன் அப்துல் முத்தலிப்பின் மகனான அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத் ஆவார்கள். ஹாஷிம் குறைஷ் குலத்தைச் சேர்ந்தவர். குறைஷிகள் அரபு இனத்தை சேர்ந்தவர்கள். அரேபியர்கள் நபி அல்-கலீல் இப்ராஹீம் அவர்களின் மகன் இஸ்மாஈல் அவர்களின் வம்சத்தில் வந்தவர்கள். -அவர்கள் மீதும் எங்களுடைய நபி மீதும் சிறந்த ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக.- அவர்கள் அறுபத்து மூன்று வருடங்கள் வாழ்ந்தார்கள். நாட்பது வருடங்கள் நபித்துவத்திற்கு முன்னரும், இருபத்து மூன்று வருடங்கள் நபியாகவும் தூதராகவும் இருந்தார்கள்.

"இக்ரஃ" என்பதைக் கொண்டு நபி ஆக்கப்பட்டார்கள். "யா அய்யுகல் முத்தஸ்ஸிர்" என்பதைக் கொண்டு தூதராக்கப்பட்டார்கள். அவர்களது ஊர் மக்கஹ் நகரமாகும். அவர்கள் மதீனஹ்வுக்கு ஹிஜ்ரத் சென்றார்கள்.

இந்தப் பகுதி நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களைப் பற்றிய ஒரு சுருக்கத்தை உள்ளடக்கியுள்ளது. இது அவர்களின் பெயர், பரம்பரை, வயது, அவர்களின் பிரச்சாரம் பற்றிய சில விடயங்கள் ஆகியவற்றை உள்ளடக்கியுள்ளது.

**கட்டாயமாக நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களை பற்றி பல செய்திகளை அறிந்து கொள்ள வேண்டும். அவற்றில் சில:**

### அவர்களுடைய பெயரும் பரம்பரையும்:

அவர்கள் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத் ஆவார். அப்துல்லாஹ்வின் தந்தையின் பெயர் அப்துல் முத்தலிப், அவருடைய தந்தையின் பெயர் ஹாஷிம். ஹாஷிம் என்பவர் குறைஷ் குலத்தைச் சேர்ந்தவர். குறைஷியர் அரேபியர்களை சேர்ந்தவர்கள். அரேபியர்கள் இப்ராஹீம் நபியின் மகனான இஸ்மாஈல் நபியின் பரம்பரையில் வந்தவர்கள்.

### அவர்களுடைய வயது:

அவர்கள் அறுபத்து மூன்று வருடங்கள் வாழ்ந்தார்கள். அதில் நாற்பது வருடங்கள் நபித்துவத்திற்கு முன்னாலும், இருபத்து மூன்று வருடங்கள் நபித்துவத்திற்கு பிறகும் வாழ்ந்தார்கள்.

### அவர்கள் நபியாக அனுப்பப்பட்டதற்குப் பிறகு உள்ள காலத்தை இரண்டாகப் பிரிக்கலாம்

1- மக்கஹ் வாழ்க்கை: பதிமூன்று வருடங்கள் நீடித்தது.
2- மதீனஹ் வாழ்க்கை: பத்து வருடங்கள் நீடித்தது.

### அவர்கள் நபியாக இருந்தார்களா அல்லது ரஸூலாக (தூதராக) இருந்தார்களா?

அவர்கள் நபியும் தூதரும் ஆவார்கள். "இக்ரஃ" என்ற வார்த்தையை கொண்டு நபி ஆக்கப்பட்டார்கள். "யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்" என்று ஆரம்பிக்கும் வசனங்களைக் கொண்டு தூதர் ஆக்கப்பட்டார்கள்.

அல்லாஹ் அவர்களை ஷிர்க்கைப் பற்றி எச்சரிக்கை செய்வதற்காகவும், ஏகத்துவத்தின் பக்கம் அழைப்பதற்காகவும் அனுப்பிவைத்தான்.

ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்:

{(வஹீயின் அதிர்ச்சியால் போர்வை) போர்த்திக் கொண்டு இருப்பவரே! (நபியே!) * நீர் எழுந்து (மக்களுக்கு அச்சமூட்டி) எச்சரிக்கை செய்வீராக. * மேலும், உம் இறைவனைப் பெருமைப் படுத்துவீராக. * மேலும், உம் ஆடைகளைத் தூய்மையாக்குவீராக. * அசுத்தத்தை வெறுத்து (ஒதுக்கி) விடுவீராக. * (பிறருக்குக் கொடுப்பதையும் விட அவர்களிடமிருந்து) அதிகமாகப் பெறும் (நோக்கோடு) உபகாரம் செய்யாதீர். (மற்றொரு அர்த்தம்: நீர் செய்யும் உபகாரம் அதிகப்படியானது என கருதி சொல்லிக்காட்டாதீர்) * உம் இறைவனுக்காகப் பொறுமையைக் கைக்கொள்வீராக.} [74:1-7]

{நீர் எழுந்து எச்சரிக்கை செய்வீராக.}: என்பதன் அர்த்தம்: இணைவைத்தலை எச்சரிக்கை செய்ய வேண்டும், மற்றும் ஏகத்துவத்தின் பக்கம் அழைக்க வேண்டும் என்பதாகும்.

{உம் இறைவனைப் பெருமைப் படுத்துவீராக.} அதாவது ஏகத்துவத்தை கொண்டு அவனை மகிமைப்படுத்துவீராக என்பதாகும்.

{உம் ஆடைகளைத் தூய்மையாக்குவீராக.} அதாவது உங்களுடைய செயல்களை இணைவைப்பிலிருந்து சுத்தப்படுத்துங்கள்.

{அசுத்தத்தை வெறுத்து (ஒதுக்கி) விடுவீராக.} அசுத்தம் என்று இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது சிலைகளை ஆகும். அவற்றை வெறுப்பது என்பது அவற்றையும், அவை சார்ந்தவர்களையும் விட்டு விட்டு ஒதுங்கி விடுவதாகும்.

நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் இதனடிப்படையில் ஏகத்துவத்தின் பக்கம் பத்து வருடங்கள் அழைத்தார்கள். பத்து வருடங்களுக்குப் பிறகு வானுலகிற்கு "மிஃராஜ்" பயணம் அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு ஐந்து நேரத் தொழுகை கடமையாக்கப்பட்டது. அவர்கள் மக்கஹ்வில் மூன்று வருடங்கள் தொழுதார்கள். அதற்குப் பின்னர் மதீனஹ்வை நோக்கி ஹிஜ்ரத் செய்யுமாறு கட்டளையிடப்பட்டார்கள்.

## அவர்களின் வரலாற்றைப் பற்றிய ஒரு சுருக்கம்

மக்கஹ் காலப்பகுதியில் தஃவஹ் பிரச்சாரத்தின் போது ஏகத்துவம், இணைவைத்தலை விட்டுவிடுவது மற்றும் வணக்கத்தை அல்லாஹ்வுக்கு மாத்திரமே செலுத்துவது ஆகியவற்றின் பக்கம் அழைப்பு விடுத்தல் போன்ற விடயங்களில் அதிகூடிய கவனம் எடுக்கப்பட்டது. பின்னர் மதீனஹ்வை நோக்கி ஹிஜ்ரத் செய்யுமாறு கட்டளையிடப்பட்டார்கள். அங்கேயும் பிரச்சாரத்தின் நிலைமை ஏகத்துவத்தின் மீதே தொடர்ந்தும் நீடித்தது. அதோடு சேர்த்து ஏனைய மார்க்கத்தின் வணக்க வழிபாடுகள், கொடுக்கல்-வாங்கல் சட்டங்கள், வாழ்வியல் அம்சங்களைப் பற்றிய சட்டதிட்டங்கள் ஆகியவை இறக்கப்பட்டன.

ஆனாலும் அவர்களது பிரச்சார வாழ்க்கையை கவனிப்பவர் புரிந்துகொள்ளக்கூடிய விடயம் யாதெனில் அல்லாஹ் அவர்களைக் கைப்பற்றிக் கொள்ளும் வரையில் ஏகத்துவத்தின் பக்கம் அழைப்பு விடுப்பது அவர்களுடன் தொடர்ந்து இருந்து கொண்டே இருந்தது.

எவர்கள் ஏகத்துவத்தை கற்றுக்கொள்ளும் விடயத்தில் மக்களுக்கு ஆர்வத்தை இல்லாமல் ஆக்கி, சில நிமிடங்கள் மாத்திரமே அதைக் கற்றுக் கொண்டால் போதுமானது என்று வாதிக்கிறார்களோ அவர்களுக்கு இதிலே வெளிப்படையான, தெளிவான மறுப்பு இருக்கின்றது.

**"வானுலகிற்கு மிஃராஜ் பயணம் அழைத்துச் செல்லப்பட்டார்"** என்ற நூலாசிரியரின் வார்த்தையில் இருந்து நாம் பெறும் பயன்கள்:

1-நபியவர்கள் கூறிச் சென்ற மறைவான விடயங்கள் குறித்து "நாங்கள் நம்பினோம், உண்மைப் படுத்தினோம், ஏற்றுக்கொண்டோம்" என்று கூற வேண்டும்.

2-பர்ழான தொழுகைகளின் முக்கியத்துவம்; ஏனெனில் அல்லாஹ் வானில் வைத்து அவற்றைக் கடமையாக்கியிருக்கிறான்.

"ஹிஜ்ரஹ்" என்பது இணைவைக்கும் நாட்டிலிருந்து இஸ்லாமிய நாட்டுக்கு பயணிப்பதாகும்.
இணைவைக்கும் நாட்டிலிருந்து இஸ்லாத்தின் நாட்டிற்கு நாடு துறந்து செல்வது இந்த உம்மத்தின் மீது கடமையாகும். அது யுக முடிவு நாளின் அந்த நேரம் வரும் வரையில் நிலையாக இருக்கும் ஒரு சட்டமாகும். ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்:
{(மார்க்கக் கட்டளையைச் சரிவர நிறைவேற்ற முடியாமல் நிராகரிப்பவர்களின் நாட்டில் இருந்துகொண்டு) எவர் தமக்குத் தாமே அநியாயம் செய்து கொண்டார்களோ அவர்களின் உயிரை மலக்குகள் கைப்பற்றும்போது "நீங்கள் எந்த நிலையில் இருந்தீர்கள்?" என்று கேட்பார்கள். (அதற்கவர்கள்) "நாங்கள் பூமியில் (கொடுமையை எதிர்க்க முடியாத) பலவீனர்களாக இருந்தோம்" என்று கூறுவார்கள். அல்லாஹ்வின் பூமி விசாலமானதாக இல்லையா? அதில் நீங்கள் ஹிஜ்ரத் செய்து (நாடு கடந்து) போயிருக்கக்கூடாதா?" என (மலக்குகள்) கேட்பார்கள்; எனவே இத்தகையோர் ஒதுங்குமிடம் நரகம் தான்; சென்றடையும் இடங்களில் அது மிகக் கெட்டதாகும். *
(ஆனால்) ஆண்களிலும், பெண்களிலும், சிறுவர்களிலும் பலவீனமானவர்களைத் தவிர - ஏனெனில் இவர்கள் எவ்வித உபாயமும் தெரியாதவர்கள்; (வெளியேறிச் செல்ல) வழியும்

அறியாதவர்கள். அத்தகையோரை அல்லாஹ் மன்னிக்கப் போதுமானவன்; ஏனெனில் அல்லாஹ் மிகவும் மன்னிப்பவனாகவும், பிழை பொறுப்பவனாகவும் இருக்கின்றான்.} [4:97-99]

{ஈமான் கொண்ட என் அடியார்களே! நிச்சயமாக என் பூமி விசாலமானது; ஆகையால் நீங்கள் என்னையே வணங்குங்கள்.} [29:56]

பக(ட்)வீ -ரஹிமஹுல்லாஹ்- கூறுகிறார்: "இந்த வசனம் இறக்கப்பட்டதற்கான காரணம்: மக்கஹ்வில் ஹிஜ்ரத் செய்யாமல் வாழ்ந்து கொண்டிருந்த முஸ்லிம்களுடைய விடயத்தில் இது இறங்கியது; அல்லாஹ் அவர்களை ஈமானின் பெயர் கொண்டு விழித்திருக்கிறான்".

ஹிஜ்ரத் செய்ய வேண்டும் என்பதற்கு ஸுன்னஹ்வில் இருந்து ஆதாரம் பின்வரும் நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் கூற்றாகும்: **(("தவ்பஹ்" (பாவமன்னிப்பு) துண்டிக்கப்படும் வரையில் ஹிஜ்ரஹ் துண்டிக்கப்பட மாட்டாது; சூரியன் மேற்கிலிருந்து உதிக்கும் வரையில் பாவமன்னிப்பு துண்டிக்கப்படமாட்டாது.))**

## ஹிஜ்ரத் மூன்று வகைப்படும்:

1- குப்ர் நாட்டிலிருந்து இஸ்லாத்தின் நாட்டிற்கு ஹிஜ்ரத் செல்லுதல். இதன் சட்டம்: வாஜிப்.

2- மக்கஹ்வை துறந்து மதீனஹ்வை நோக்கி ஹிஜ்ரத் செய்தல். இது மக்கஹ் வெற்றியுடன் முடிவடைந்துவிட்டது.

3- செயல்கள், செயல்களைச் செய்பவர்கள், இடங்கள், காலங்கள் ஆகியவற்றில் அல்லாஹ் எதையெல்லாம் துறக்கவேண்டும் / கைவிட வேண்டும் என்று கட்டாயமாக்கியுள்ளானோ அவற்றை துறத்தல் / கைவிடல்.

### மூன்றாவது வகையில் உள்ளடங்குபவை:

-செயல்கள்: அல்லாஹ் தடை செய்துள்ள (ஹராமான) அனைத்தும். முக்கியமாக இணைவைத்தல்.

செயல்களைச் செய்பவர்கள்: நிராகரிப்பாளர்கள், நயவஞ்சகர்கள் போன்றோர்.
-காலங்கள்: நிராகரிப்பாளர்கள் கொண்டாடும் காலங்களை கைவிடல் / புறக்கணித்தல்.
-இடங்கள்: நிராகரிப்பாளர்கள் கொண்டாடும் இடங்களை கைவிடல் புறக்கணித்தல்.

தவ்பஹ் - பாவமன்னிப்பு இரண்டு விடயங்களைக் கொண்டு துண்டிக்கப்படும்:
1-மேற்கிலிருந்து சூரியன் உதித்தல்
2-மரணத்தறுவாயை அடைதல்
{இன்னும் எவர்கள் தீவினைகளைத் (தொடர்ந்து) செய்து கொண்டேயிருந்து, முடிவில் அவர்களை மரணம் நெருங்கிய போது, “நிச்சயமாக இப்பொழுது நான் (பாவங்களுக்காக வருந்தி) மன்னிப்புத் தேடுகிறேன்” என்று கூறுகின்றார்களோ, அவர்களுக்கும், எவர்கள் காஃபிர்களாகவே மரணிக்கிறார்களோ அவர்களுக்கும் பாவமன்னிப்பு இல்லை.} [4:18]

(("மக்கஹ்வின்" வெற்றிக்கு பிறகு ஹிஜ்ரத் இல்லை)) என்ற நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களின் கூற்று மக்கஹ்விலிருந்து மதீனஹ்வை நோக்கி ஹிஜ்ரத் போவதையே குறிக்கும்.
இதில் மக்கஹ் இனி எப்போதும் குப்ர் நாடாக மாற முடியாது என்பதும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

அவர்கள் மதீனஹ்வில் நிலைபெற்ற போது இஸ்லாத்தின் ஏனைய சட்டதிட்டங்களை நடைமுறைப்படுத்துமாறும் ஏவப்பட்டார்கள். உதாரணம்: ஸகாத்(1), நோன்பு, ஹஜ், ஜிஹாத், அதான், நன்மையை ஏவித் தீமையை தடுத்தல் மற்றும் ஏனைய சட்டதிட்டங்கள்.
இதன் அடிப்படையில் அவர்கள் பத்து வருடங்கள் வாழ்ந்தார்கள். அதன் பின்னர் வபாத்தானார்கள்(2).

அல்லாஹ்வின் ஸலவாத்தும் ஸலாமும் அவர்கள் மீது உண்டாவதாக.
அவர்களின் மார்க்கம் நிலையாக இருக்கின்றது. இதுதான் அவர்களின் மார்க்கம்; எந்த ஒரு நலவையும் உம்மத்துக்கு-சமுதாயத்திற்குக் காட்டிக் கொடுக்காமல் செல்லவில்லை, எந்த ஒரு தீமையையும் அவர்களுக்கு எச்சரிக்கை செய்யாமலும் விடவில்லை. அவர்கள் காட்டித்தந்த நன்மை என்பது ஏகத்துவமும் அல்லாஹ் விரும்புகின்ற, பொருந்திக் கொள்கின்ற ஏனைய அனைத்து விடயங்களுமாகும். அவர்கள் எச்சரிக்கை செய்த தீமை என்பது இணைவைத்தலும் அல்லாஹ் வெறுக்கின்ற, மறுக்கின்ற அனைத்து விடயங்களுமாகும்(3).

(1) அஷ்ஷேய்க் இப்னு உஸைமீன் -ரஹிமஹுல்லாஹ்- கூறுகிறார்: ஸகாத் ஆரம்பமாக மக்கஹ்வில் வைத்து கடமையாக்கப்பட்டது. ஆனாலும் செல்வம் எந்த அளவை அடைந்தால் கொடுக்க வேண்டும் என்பதும் அதில் எந்த அளவு கட்டாயமாக கொடுக்க வேண்டும் என்பதும் நிர்ணயிக்கப்படவில்லை. மதீனஹ்வில் வைத்துத்தான் நிஸாபுகழும் கொடுக்கவேண்டிய அளவும் நிர்ணயிக்கப்பட்டன.

(2) நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் ஹிஜ்ரத்திற்குப் பிறகு பதினோராம் ஆண்டு வபாத் ஆனார்கள். ஆஇஷஹ் -ரலியல்லாஹு அன்ஹா- அவர்களின் அறையில் அவர்கள் அடக்கம் செய்யப்பட்டார்கள்.

(3) அவர்கள் உம்மத்திற்கு வழிகாட்டிய நன்மையைத் தவிர வேறு ஒரு நன்மையும் கிடையாது. அவர்கள் உம்மத்திற்கு எச்சரிக்கை செய்த தீமையைத் தவிர வேறு எந்த ஒரு தீமையும் கிடையாது.

"அவர்கள் அமானிதத்தை நிறைவேற்றினார்கள்; தூதுத்துவத்தை எத்திவைத்தார்கள்; உம்மத்திற்கு நலவை நாடினார்கள்;

அல்லாஹ்வுக்காக உண்மையாக போராடினார்கள்; எங்களை வெள்ளை வெளேரென்ற தெளிவான பாதையில் (மார்க்கத்தில்) விட்டு விட்டு சென்றார்கள்; அதனுடைய இரவும் பகலைப் போன்றது; அழிந்துபோகக்கூடியவனை தவிர அதிலிருந்து வேறு யாரும் வழிகெட்டுப் போகமாட்டார்" என்று நாம் சாட்சி கூறுவது அவசியமாகும்.

## ஹராமாக்கப்பட்டதில் மிகவும் பாரதூரமானது

1- பெரிய ஷிர்க் (மார்க்கத்தை விட்டும் வெளியேற்றக் கூடியது)

2- சிறிய ஷிர்க் (மார்க்கத்திலிருந்து வெளியேற்றாது)

3- பெரும் பாவங்கள் (அதாவது குறிப்பிட்ட தண்டனை கூறப்பட்ட பாவங்கள்)

4- சிறிய பாவங்கள் (அதாவது குறித்த தண்டனை குறிப்பிடப்படாத அனைத்து ஹராமாக்கப்பட்ட விடயங்களும்)

அல்லாஹ் அவர்களை அனைத்து மனிதர்களுக்கும் அனுப்பி வைத்துள்ளான். மனித ஜின் வர்க்கங்கள் அனைவரும் அவர்களுக்கு வழிப்படுவதை கட்டாயமாக்கியுள்ளான்.

ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்: {மனிதர்களே! நிச்சயமாக நான் உங்கள் அனைவருக்கும் (அனுப்பப்பட்ட) அல்லாஹ்வின் தூதராவேன்.} [7:158] (1)

(1) நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் முழு மனித சமுதாயத்திற்குமாக அனுப்பப்பட்டார்கள். அதன் மூலம் அவர்களுக்கு முன்னால் இருந்த அனைத்து மார்க்கங்களும் மாற்றப்பட்டுவிட்டன.

நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களுடைய காலத்திலும் இன்றைய எமது காலத்திலும் வாழ்ந்த, வாழ்கின்ற யூத, கிறிஸ்தவர்கள் இஸ்லாமிய பிரச்சாரம் அவர்களுக்கு கிடைத்து, மார்க்கத்தில் அவர்கள்

நுழையாதுவிட்டால் அவர்களும் காபிர்களாவர். அவர்கள் மூஸா, ஈஸா -அலைஹிமஸ்ஸலாம்- ஆகிய நபிமார்கள் கொண்டு வந்த அதே கொள்கையில் இருந்தாலும் சரியே. அதற்கான ஆதாரங்கள் பின்வருமாறு:

1- {(நபியே! அவர்களிடம்) நீங்கள் கூறிவிடுங்கள்: “வேதத்தையுடையோரே! நமக்கும் உங்களுக்குமிடையே ஒரு சமத்துவமான வார்த்தையின் பக்கம் வாருங்கள்; (அதாவது) நாம் அல்லாஹ்வைத் தவிர வேறெவரையும் வணங்க மாட்டோம்; அவனுக்கு எவரையும் இணைவைக்க மாட்டோம்.} [3:64]

2- {வேதம் அருளப்பட்டவர்களில் எவர்கள் அல்லாஹ்வையும் இறுதிநாளையும் நம்பிக்கை கொள்ளாமலும், அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் தடை செய்தவைகளை தடையாகக் கருதாமலும், இந்த சத்திய மார்க்கத்தைப் பின்பற்றாமலும் இருக்கின்றனரோ அவர்கள், (தம்) கையால் பணிவுடன் "ஜிஸ்யா" (வரியைச்) செலுத்தும் வரை நீங்கள் அவர்களுடன் போர் புரியுங்கள்.} [9:29]

3- நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் கூறினார்கள்: **((என்னுடைய ஆத்மா எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக எந்த ஒரு யஹூதியோ நஸ்ரானியோ என்னைப் பற்றி கேள்விப்பட்ட பின்னரும் என்னை விசுவாசம் கொள்ளாமல் இருந்தால் அவர் நரகவாசிகளில் உள்ளவராவார்.))**

அல்லாஹ் அவர்களைக் கொண்டு மார்க்கத்தைப் பூர்த்தி செய்தான். ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்: {இன்றைய தினம் உங்களுடைய மார்க்கத்தை உங்களுக்காகப் பூர்த்தி செய்து விட்டேன்; என்னுடைய அருட்கொடையை உங்கள் மீது பரிபூரணப் படுத்திவிட்டேன்; இஸ்லாமை உங்களுக்கு மார்க்கமாக பொருந்திக் கொண்டேன்} [5:3] (2)

(2) இந்த வசனத்தில் பித்அத்வாதிகளுக்கு மறுப்பிருக்கிறது.

அவர்கள் மரணித்து விட்டார்கள் என்பதற்கு ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்: {(நபியே!) நிச்சயமாக நீரும் மரணிப்பவர்; அவர்களும் மரணிப்பவர்கள்; பின்னர் நிச்சயமாக நீங்கள் எழுப்பப்படும் (மறுமை) நாளில் உங்கள் இறைவனிடம் தர்க்கித்துக் கொள்வீர்கள்.} [39:30,31]

# ஐந்தாவது: முடிவுரை

மனிதர்கள் மரணித்தால் எழுப்பப்படுவார்கள். ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்: {இப் பூமியிலிதிலிருந்தே நாம் உங்களைப் படைத்தோம். அதனுள்ளேயே உங்களை மீட்டுவோம் (நுழைவிப்போம்); இன்னும், அதிலிருந்தே நாம் உங்களை மீண்டும் மற்றொரு தடவையும் வெளிப்படுத்துவோம்.} [20:55]

{அல்லாஹ்வே பூமியிலிருந்து உங்களை உருவாக்கினான். பின்னும், அதிலேயே அவன் உங்களை (மரணிக்கும்படி செய்து, அதில்) மீண்டும் கொண்டு சேர்ப்பான். மேலும் (அதிலிருந்தே) மற்றொரு முறையும் உங்களை வெளிப்படுத்துவான்.} [71:17,18]

எழுப்பப்பட்டதற்குப் பிறகு அவர்கள் விசாரிக்கப்பட்டு அவர்களின் செயலுக்குரிய கூலி கொடுக்கப்படுவார்கள். ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்:

{வானங்கள், பூமியிலுள்ளவை அனைத்தும் அல்லாஹ்வுக்கு உரியனவே. ஆகவே, தீமை செய்தவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயலுக்குத் தக்கவாறு (தீமையைக்) கூலியாகக் கொடுக்கின்றான். நன்மை செய்தவர்களுக்கு மிக நல்லத்தைக் கூலியாகக் கொடுக்கின்றான்.} [53:31] (1)

(1) அனைத்து மனிதர்களும் மரணத்தை சுவைப்பார்கள். அதில் எந்த சந்தேகமும் இல்லை. மகத்தான ஒரு நாளுக்காக அவர்கள் எழுப்பப்படுவார்கள். அதுதான் எழுப்பப்படும் - கியாமத் நாள். அதன் பின்னர் அவர்கள் விசாரணை செய்யப்பட்டு ஒவ்வொருவருக்கும் தன்னுடைய செயலுக்கேற்ற கூலி கொடுக்கப்படும்.

எவர் எழுப்பப்படுவதை பொய்ப்பிக்கிறாரோ அவர் நிராகரித்துவிட்டார். ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்:
{நிராகரித்தவர்கள் அவர்கள் எழுப்பப்படவே மாட்டார்கள் என்று தவறாக வாதிடுகின்றனர். (நபியே!) கூறுவீராக: அப்படியல்ல! என் இறைவன் மீது சத்தியமாக, நீங்கள் நிச்சயமாக எழுப்பப்படுவீர்கள்; நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை பற்றியும் நிச்சயமாக அறிவிக்கப்படுவீர்கள். அது அல்லாஹ்வுக்கு மிகவும் எளிதானதாகும்.} [64:7] (2)

(2) எவர் எழுப்பப்படுவதையும் விசாரணை செய்யப்படுவதையும் பொய்யெனக் கூறுகிறாரோ அவர் நிராகரித்துவிட்டார். ஏனெனில் ஈமானின் தூண்களில் ஒரு தூணை அவர் மறுத்துவிட்டார்.

அல்லாஹ் அனைத்துத் தூதர்களையும் நன்மாராயம் கூறுபவர்களாகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாகவும் அனுப்பி வைத்தான். ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்:
{நன்மாராயம் கூறுபவர்களாகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாகவும் தூதர்களை (அல்லாஹ் அனுப்பினான்).} [4:165]

அவர்களில் ஆரம்பமானவர் நூஹ் -அலைஹிஸ்ஸலாம்-. அவர்களில் இறுதியானவர் முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்-. அவர்கள் தான் நபிமார்களிலும் இறுதியானவர். நூஹ் -அலைஹிஸ்ஸலாம்- அவர்கள் **தூதர்**களில் முதலாமவர் என்பதற்கு பின்வரும் அல்லாஹ்வின் கூற்று ஆதாரமாகும்:
{நிச்சயமாக நூஹிற்கும் அவருக்குப் பின்னர் வந்த நபிமார்களுக்கும் நாம் வஹீ அறிவித்தது போன்று உமக்கும் வஹீ அறிவித்தோம்} [4:163] (3)

(3) நூஹ் -அலைஹிஸ்ஸலாம்- தூதர்களில் முதலாமவர். ஆதாரம் மேற்படி [4:163] அல்லாஹ்வின் கூற்றாகும்.
நபிமார்களில் முதலாமவர் ஆதம் -அலைஹிஸ்ஸலாம்- ஆவார். ஆதாரம்: நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களிடம், "ஆதம் நபியாக இருந்தாரா?" என்று கேட்கப்பட்ட போது, **((அவர் (அல்லாஹ்வால்) பேசப்பட்ட நபி))** என்று பதில் கூறினார்கள்.
இறுதி நபியியும் இறுதி ரஸூலும் முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களே. ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்: {முஹம்மத் உங்களின் ஆண்களில் எவருக்கும் தந்தையாக இருக்கவில்லை. ஆனாலும், அவர் அல்லாஹ்வின் தூதரும் நபிமார்களில் இறுதியானவருமாவார்கள்.} [33:40]
நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களுக்குப் பிறகு எவன் தான் நபி என்றோ, தூதர் என்றோ வாதிப்பானோ அவன் பொய்யனாகவும், காபிராகவும் இருப்பான். இப்படியானவனை யார் உண்மைப் படுத்துகிறாரோ அவரும் அவனைப் போன்று காபிராக இருப்பார்.

தாகூத்தை நிராகரிப்பதையும், அல்லாஹ்வை ஈமான் கொள்வதையும் அல்லாஹ் அனைத்து அடியார்கள் மீதும் கட்டாயமாக்கியுள்ளான்.
இப்னுல் கைய்யிம் -ரஹிமஹுல்லாஹ்- கூறுகிறார்: "தாகூத் என்பது: அடியான் அளவுகடந்து செயல்படும், வணங்கப்படுகின்ற அல்லது பின்பற்றப்படுகின்ற அல்லது வழிப்படப்படுகின்ற ஒன்றைக் குறிக்கும்".
நூஹ் –அலைஹிஸ்ஸலாம்- அவர்களிலிருந்து முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் வரை ஒவ்வொரு சமுதாயத்திற்கும் அனுப்பப்பட்ட தூதர்கள் அல்லாஹ்வை மாத்திரம் வணங்க வேண்டும் என்று அவர்களுக்கு கட்டளையிட்டுக் கொண்டும், தாகூதை

விட்டும் அவர்களைத் தடுத்துக் கொண்டும் இருந்தார்கள்.
ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்:
{ஒவ்வொரு சமுதாயத்திலும் "அல்லாஹ்வை வணங்குங்கள்; தாகூதை தவிர்ந்து கொள்ளுங்கள் என்று (கூறும்) ஒரு தூதரை நாம் திடமாக அனுப்பிவைத்தோம்.} [4:163]

தாகூத்கள் அதிகமாக உள்ளனர்; அவர்களில் முக்கியமானவர்கள் ஐவர்: 1- இப்லீஸ் -அல்லாஹ் அவனை சபித்துவிட்டான்-. 2- தான் பொருந்திக் கொள்ளும் நிலையில் வணங்கப்படும் படைப்பு. 3- தன்னை வணங்குமாறு மக்களுக்கு அழைப்பு விடுப்பவன். 4- மறைவான அறிவு தனக்கு உண்டு என்று வாதிப்பவன். 5- அல்லாஹ் இறக்கி வைத்ததற்கு மாற்றமான ஒன்றைக் கொண்டு தீர்ப்பு வழங்குபவன்.
ஆதாரம் (பின்வரும்) அல்லாஹ்வின் கூற்றாகும்:
{மார்க்கத்தில் நிர்ப்பந்தம் இல்லை; வழி கேட்டிலிருந்து நேர்வழி தெளிவாகி விட்டது; எவர் தாகூதை நிராகரித்து அல்லாஹ்வை ஈமான் கொள்கிறாரோ நிச்சயமாக அவர் பலமான கயிற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டவராவார்.} [2:256]
இதுவே "லா இலாஹ இல்லல்லாஹ்" வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை என்பதன் அர்த்தமுமாகும்.
ஹதீஸில் **((காரியத்தின் (மார்க்கத்தின்) தலையாயது இஸ்லாம்(கட்டுப்படல்). அதன் தூண்/அடித்தளம் தொழுகை. அதன் திமில் சதையின் உச்சம் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்வது))** என்று இடம்பெற்றுள்ளது.

அல்லாஹ் ரஸூல்மார்களையும் நபிமார்களையும் நன்மாராயம் கூறுபவர்களாகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாகவும் அனுப்பி வைத்தான். அவர்கள் அனைவரும் ஏகத்துவ அழைப்பிலும், தாகூதையும் எல்லா வகையான இணைவைத்தலையும் எதிர்ப்பதிலும் ஒருமித்து இருந்தார்கள். ஆதாரம்: {ஒவ்வொரு சமுதாயத்திலும் ஒரு தூதரை திடமாக நாம்

அனுப்பி வைத்தோம்} அதாவது ஒவ்வொரு கூட்டத்திலும்.

{அல்லாஹ்வை வணங்குங்கள்} அதாவது அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துங்கள்.

{தாகூதை தவிர்ந்து கொள்ளுங்கள்} அதாவது இங்கு பயன்படுத்தப்பட்டுள்ள "இஜ்தனிபூ" என்ற வார்த்தை தாகூத்கள் ஒரு பக்கத்திலும் நீங்கள் இன்னொரு பக்கத்திலும் இருக்குமாறு செய்யுங்கள் என்பதை குறிக்கும். இது அவர்களை விட்டும் தடுப்பதையும் தூரமாவதையும் குறிக்கின்ற மிகவும் ஆழமான ஒரு வார்த்தையாகும். இது இணைவைத்தலில் இருந்தும் அதை சார்ந்தவர்களில் இருந்தும் ஒதுங்கித் தூரமாக இருக்க வேண்டும் என்பதை உறுதி செய்கிறது.

அல்லாஹ்வை ஈமான் கொள்வதற்கு முன்னால் தாகூதை நிராகரிப்பது அவசியமாகும். (ஏனெனில்,) {எவர் தாகூதை நிராகரித்து அல்லாஹ்வை ஈமான் கொள்கிறாரோ...} என்று அல்லாஹ் கூறுகிறான்.

"தாகூத்" என்பது ஒரு அடியான் ஏதாவது ஒன்றில் வரம்பு மீறி நடக்கும் போது அந்தப் பொருளை தாகூத் என்று அழைக்கப்படும். அது (மரங்கள், கற்கள் போன்ற) வணங்கப்படுகின்ற ஒன்றாக இருக்கலாம்; அல்லது (கெட்ட அறிஞர்கள் போன்று) பின்பற்றப்படுகின்ற ஒன்றாக இருக்கலாம்; அல்லது (அல்லாஹ்வுக்கு கட்டுப்படாத தலைவர்கள் போன்று) வழிப்படப்படுகின்ற ஒன்றாக இருக்கலாம்.

## அல்லாஹ் இறக்கி வைத்து இருப்பதற்கு மாற்றமானதை கொண்டு தீர்ப்பு வழங்குவதின் விளக்கம்:

1- பெரிய குப்ர்: மனித சட்டம் அல்லாஹ்வின் சட்டத்திற்குச் சமமானது அல்லது அதைவிடச் சிறந்தது என்று நம்புதல்.

2- சிறிய குப்ர்: அல்லாஹ் இறக்கி வைத்திருப்பதற்கு மாற்றமானதைக் கொண்டு தீர்ப்பு வழங்குவது கூடாது என்று நம்பியிருந்தும், மனோ இச்சைக்காகவோ, தலைமைத்துவ

ஆசைக்காகவோ, வேறு ஏதேனும் காரணங்களுக்காகவோ அதன் மூலம் தீர்ப்பு வழங்குதல்.

**இமாம் இப்னுல் கைய்யிம் ஜிஹாதை நான்கு படித்தரங்களாக வகுத்துள்ளார்:**

1- மனதோடு போராடுவது: அறிவை கற்றல், அமல் (நற் செயல்) செய்தல், அல்லாஹ்வின் பாதையில் தஃவஹ் - பிரச்சாரம் செய்தல், பொறுமைசெய்தல் ஆகியவை மூலம் அது நடைபெறும்.

2- ஷைத்தானுடன் போராடுதல்: -ஷிர்க் மற்றும் பித்அத் ஆகிய- ஷுபுஹாத் (குழப்பமானவை)யையும், -பெரும்பாவங்கள், சிறு பாவங்கள் ஆகிய- ஷஹவாத் (ஆசை)களையும் விட்டுவிடுவதன் மூலம் அது நடைபெறும்.

3- காபிர்களுடனும், முனாபிக்களுடனும் போராடுதல்: உள்ளம், நாவு, செல்வம், ஆத்மா ஆகியவற்றின் மூலம் அது நடைபெறும்.

4- அநியாயக்காரர்கள், பித்அத்வாதிகள், பாவிகள் ஆகியோருடன் போராடுவது: கை, நாவு, உள்ளம் ஆகியவை மூலம் அது நடைபெறும்.

**முடிவுரை:**

இந்த மகத்தான சிறு நூலை சிந்திப்பதுடன், அதில் அதி விசேட கவனம் செலுத்துவது புத்தியுள்ள ஒவ்வொருவருக்கும் அவசியமாகும்; ஏனெனில், ஒவ்வொரு மனிதனுக்கும் தனது மண்ணறையில் தேவைப்படும் மகத்தான அடிப்படைகளை அது உள்ளடக்கியுள்ளது.

இது (இறுதியாக), அல்லாஹ்வே மிக அறிந்தவன். முஹம்மத் (நபி) அவர்கள் மீதும் அவருடைய குடும்பத்தினர், தோழர்கள் மீதும் அல்லாஹ்வின் ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக.

**மூன்று அடிப்படைகள் -சுருக்கமாக அவை: மண்ணறையில் வினவப்படும் மூன்று கேள்விகள்-, நாம் ஏன் ஏகத்துவத்தைக் கற்கவேண்டும்?, இம்மூல நூலை கற்பதற்குக் காரணம், இம்மூன்று அடிப்படைகளை கற்றுக்கொள்வதால் நாம் பெறப்போகும் பயன் தான் என்ன?**

நான்கு அம்சங்கள் மற்றும் அவற்றின் ஆதாரம்: (ஸூரத்துல் அஸ்ர்)

| | |
|---|---|
| العلم<br>கல்வி | அல்லாஹ்வையும், அவனுடைய நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களையும், இஸ்லாம் மார்க்கத்தையும் ஆதாரங்களுடன் அறிந்து கொள்ளல். -இவையே மூன்று அடிப்படைகள் எனப்படுகிறது- |
| العمل به அதை<br>செயல்படுத்தல் | இல்ம் (கல்வி) அமலை (செயலை) அழைக்கும்; இது அதற்குப் பதில் அளிக்காவிட்டால் அது சென்றுவிடும். |
| الدعوة إليه<br>அதன் பால்<br>அழைத்தல் | **தஃவஹ் பிரச்சாரத்தின் நிபந்தனைகள்:** இஹ்லாஸ் எனும் உளத்தூய்மை, மார்க்கக் கல்வி, அழைக்கப்படுபவரின் நிலைமை பற்றிய அறிவு, ஹிக்மத் (ஞானம்), பொறுமை. |
| | முதலாவதாக ஏகத்துவத்தின் பக்கமே அழைக்க வேண்டும்; இதுவே நபிமார்கள், ரஸூல்மார்களினது பிரச்சாரமாகும். தஃவஹ்வின் படித்தரங்களில் உயர்ந்தது ஏகத்துவமும், இணைவைப்பை மறுப்பதுமாகும். |
| الصبر<br>அவற்றிலுள்ள பாதிப்புக்களை<br>பொறுத்துக் கொள்ளல் | தொழுகை போன்ற அல்லாஹ்வுக்கு வழிப்படும் விடயத்திலும், வட்டி போன்ற அல்லாஹ்வுக்கு பாவம் செய்யும் விடயத்தை விடுவதிலும், ஏழ்மை போன்ற துன்பம் தரும் அல்லாஹ்வின் விதிகள் விடயத்திலும் பொறுமைசெய்தல். |
| | கற்றல், பின்னர் செயல்படுத்தல், பின்னர் பிரச்சாரம் செய்தல் ஆகிய மூன்றிலும் பொறுமையைக் கடைபிடித்தல். |

மூன்று அடிப்படைகள் -சுருக்கமாக அவை: மண்ணறையில் வினவப்படும் மூன்று கேள்விகள்-, நாம் ஏன் ஏகத்துவத்தைக் கற்கவேண்டும்?, இம்மூல நூலை கற்பதற்கு காரணம், இம்மூன்று அடிப்படைகளைக் கற்றுக்கொள்வதால் நாம் பெறப்போகும் பயன் தான் என்ன?

மூன்று அம்சங்கள் المسائل الثلاث

**தௌஹீதுர் ருபூபிய்யஹ்** -ருபூபிய்யஹ்வில் ஏகனாக இருப்பவனையே உலூஹிய்யஹ் விடயத்திலும் ஓர்மைப் படுத்துவது அவசியமாகும்-, **மற்றும் தவ்ஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிஃபாத்**.

**தவ்ஹீதுல் உலூஹிய்யயஹ்** –இஹ்லாஸ்- அல்லாஹ் தன் வணக்கத்தில் தன்னுடன் எவரும் இணையாக்கப்படுவதை பொருந்திக் கொள்ளமாட்டான். அவர் (அவனுக்கு) நெருக்கமான வானவராகவோ, (அவனால்) அனுப்பப்பட்ட நபியாகவோ இருந்தாலும் சரியே.

**இணைவைப்பு மற்றும் இணைவைப்பவர்களில் இருந்தும் தூரமாதல்.**

***உள்ளத்தினால்*** -அவர்களை வெறுப்பது மூலம்- தூரமாதல்.

**நாவினால்** -{நீங்கள் வணங்குவதை விட்டும் நான் தூரமானவன்} என்று சொல்வது மூலம்- தூரமாதல்.

**உடல் உறுப்புகளால்** -அவர்களின் கொண்டாட்டங்களில் பங்கு கொள்ளாமலும், அவர்களுக்கு ஒப்பாகாமலும்- தூரமாதல்.

மூன்று அடிப்படைகள் -சுருக்கமாக அவை: மண்ணறையில் வினவப்படும் மூன்று கேள்விகள்-, நாம் ஏன் ஏகத்துவத்தை கற்கவேண்டும்?, இம்மூல நூலைக் கற்பதற்குக் காரணம், இம்மூன்று அடிப்படைகளை கற்றுக்கொள்வதால் நாம் பெறப்போகும் பயன் தான் என்ன?

தவ்ஹீதை கற்பதற்கான காரணம்

**"ஹனீபீஃய்யஹ்"** என்பது: இஹ்லாஸ், ஏகத்துவம் ஆகியவற்றின் மீது நிறுவப்பட்டுள்ள ஷிர்கை விட்டும் தூரமாக சாய்ந்துள்ள மார்க்கத்தைக் குறிக்கும்.

**தவ்ஹீத் – ஏகத்துவம்**

**மொழி வழக்கில்:** ஒருமைப் படுத்துதல் என்பது அர்த்தமாகும். அதாவது ஏதாவது ஒரு பொருளை ஒன்றாக ஆக்குவதற்கு சொல்லப்படும் வார்த்தையாகும்.

**மார்க்க வழக்கில்:** ருபூபிய்யஹ், உலூஹிய்யஹ், அல்-அஸ்மாஉ வஸ்ஸிஃபாத் ஆகியவற்றில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துவதை / ஏகனாக கருதுவதைக் குறிக்கும்.

**இது மூன்று வகைப்படும்:**

**தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்:** அல்லாஹ்வை அவனுடைய செயல்களைக் கொண்டு ஓர்மைப் படுத்துதல். படைத்தல், ஆட்சி அதிகாரம் செய்தல், திட்டமிடல் ஆகியவற்றில் அல்லாஹ்வை ஏகனாகக் கருதுதல்.

**தவ்ஹீதுல் உலூஹிய்யஹ்:** வணக்கத்தில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துதல். அதாவது அடியார்களின் செயல்களில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துதல்.

**தவ்ஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிஃபாத்:** அல்லாஹ் தன்னுடைய வேதத்தில் அல்லது தனது தூதரின் மூலம் அறிவித்ததில் தனக்கு சூட்டிக்கொண்ட பெயர்கள் மற்றும் தன்னை வர்ணித்துக் கொண்ட பண்புகள் ஆகியவற்றில் அவனை ஒருமைப்படுத்துதல். அதாவது தனக்கு இருப்பதாக நிலைநாட்டியவற்றை நிலைநாட்டவும், தன்னை விட்டும் மறுத்தவற்றை மறுக்கவும் வேண்டும்; அதில் திரிபுபடுத்தவோ, கருத்தை மறுக்கவோ, இவ்வாறு தான் என்று கற்பனையாக வடிவம் கொடுக்கவோ, ஒப்பிடவோ கூடாது.

**இணைவைத்தல்:** அல்லாஹ் அல்லாதவரை அல்லாஹ்வுடன் அழைத்தல். இதுவே பூமியில் செய்யப்படும் மிகப் பெரும் பாவமாகும்.

மூன்று அடிப்படைகள் -சுருக்கமாக அவை: மண்ணறையில் வினவப்படும் மூன்று கேள்விகள்-, நாம் ஏன் ஏகத்துவத்தை கற்கவேண்டும்?, இம்மூல நூலைக் கற்பதற்குக் காரணம், இம்மூன்று அடிப்படைகளை கற்றுக்கொள்வதால் நாம் பெறப்போகும் பயன் தான் என்ன?

மூன்று அடிப்படைகள் الأصول الثلاثة

**அல்லாஹ்வை அறிதல்:** உன்னுடைய இறைவன் யார்? அல்லாஹ்வை எவ்வாறு அறிந்து கொண்டீர்? ரப்(b)பாக இருப்பவனே வணங்கப்படவும் வேண்டும், வணக்கங்களின் வகைகள், ஏதாவது ஒரு வணக்கத்தை அல்லாஹ் அல்லாதவருக்கு செலுத்துவோரின் சட்டம், அவற்றுக்கான ஆதாரம்.

ஆதாரங்களுடன் **இஸ்லாம் மார்க்கத்தை அறிதல்**, இஸ்லாத்தின் வரைவிலக்கணம், மார்க்கத்தின் படித்தரங்கள், இஸ்லாத்தின் தூண்கள், கலிமதுஷ் ஷஹாதஹ் - சாட்சியத்தின் வரைவிலக்கணம், ஈமானின் தூண்கள், ஈமானின் கிளைகள், இஹ்ஸான், மார்க்கத்தின் படித்தரங்களுக்கான ஆதாரம், இறுதி நாளின் நேரத்திற்குரிய அடையாளங்கள்.

**நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களை அறிதல்**, அவர்களது பரம்பரை, பிறப்பு, வயது, நபித்துவம், தூதுத்துவம், நாடு, அவர்கள் அனுப்பப்பட்டதன் நோக்கம், ஏகத்துவப் பிரச்சாரம் செய்த காலம், இஸ்ரா; மிஃராஜ், எங்கே எப்போது தொழுகை கடமையாக்கப்பட்டது? ஹிஜ்ரத், அதன் சட்டம், அதன் நேரம், எப்போது மார்க்கத்தின் ஏனைய சட்டதிட்டங்கள் விதியாக்கப்பட்டன? தஃவஹ் செய்த காலம், மரணம், அவர்கள் கொண்டு வந்த மார்க்கம், மனு ஜின் வர்க்கங்களுக்கு பொதுவாக அனுப்பப்பட்டிருப்பது, மார்க்கத்தின் பூரணத்துவம், அருட்கொடை பரிபூரணமாக்கப்படுதல்.

<table>
<tr><td rowspan="6">மூன்று அடிப்படைகள் -சுருக்கமாக அவை: மண்ணறையில் வினவப்படும் மூன்று கேள்விகள்-, நாம் ஏன் ஏகத்துவத்தை கற்கவேண்டும்?, இம்மூல நூலைக் கற்பதற்குக் காரணம், இம்மூன்று அடிப்படைகளைக் கற்றுக்கொள்வதால் நாம் பெறப்போகும் பயன் தான் என்ன?</td><td rowspan="6">முடிவுரை الخـــــاتمة</td><td colspan="4">மரணத்துக்குப் பின்னால் எழுப்பப்படுதல், செயல்களுக்கான கேள்வி கணக்கு, எழுப்பப்படுவதை நிராகரிப்பவர் காபிர், தூதர்களின் பணியும் பிரச்சாரமும், ஆரம்பத் தூதரும் இறுதித் தூதரும், தவ்ஹீதின் இரு தூண்களான: தாகூதை நிராகரிப்பதும் அல்லாஹ்வை ஈமான் கொள்வதும், தாகூதின் வரைவிலக்கணம், பிரதான தாகூத்கள், தாகூதை நிராகரிக்கும் முறை, "லா இலாஹ இல்லல்லாஹ்" என்பதன் கருத்து, மார்க்கத்தின் தலையாயது இஸ்லாம் (கட்டுப்படுதல்), மார்க்கத்தின் தூண் தொழுகை, மார்க்கத்தின் உச்சகட்டம் அல்லாஹ்வின் பாதையில் போராடுவதில் இருக்கிறது.</td></tr>
<tr><td rowspan="5">ஜிஹாதின் - போராட்டத்தின் வகைகள்</td><td>جهاد النّفس<br>மனதுடன் போராடுவது</td><td colspan="2">மார்க்க கல்வியை கற்றல், அதை செயல்படுத்துதல், அதன் பக்கம் அழைத்தல், பொறுமை செய்தல் ஆகிய அல்-அஸ்ர் ஸூரஹ்வில் இடம்பெற்றுள்ளவை மூலம் நடைபெறும்</td></tr>
<tr><td rowspan="4">جهاد الشّيطان<br>ஷைத்தானுடன் போராடுவது</td><td rowspan="2">شهوات<br>ஆசைகள்</td><td>பெரும்பாவங்கள் -குறிப்பிட்ட தண்டனை நிர்ணயிக்கப்பட்ட ஒவ்வொரு பாவமும் பெரும் பாவமாகும்-</td></tr>
<tr><td>சிறு பாவங்கள் -குறிப்பிட்ட தண்டனை நிர்ணயிக்கப்படாமல் தடைசெய்யப்பட்ட ஒவ்வொன்றும் சிறு பாவமாகும்-</td></tr>
<tr><td rowspan="2">شبهات<br>குழப்பத்திற் குரியவை</td><td>பெரிய ஷிர்க் -மார்க்கத்தை விட்டு வெளியேற்றக் கூடியது-, சிறிய ஷிர்க்</td></tr>
<tr><td>பித்அத்கள் (மார்க்கத்தில் நூதனமாக உருவாக்கப்பட்டவை)</td></tr>
</table>

| | | | | |
|---|---|---|---|---|
| | | | **காபிர்களுடனும் முனாபிக்களுடனும் போராடுவது** | **உள்ளம், நாவு, உடல் உறுப்புகள், செல்வம்** ஆகியவற்றின் மூலம் நடைபெறும் |
| | | | **அக்கிரமக்காரர்களுடனும், பித்அத்வாதிகளுடனும், பாவிகளுடனும் போராடுவது** | **கை, நாவு, உள்ளம்** ஆகியவற்றின் மூலம் நடைபெறும் |
| | | தாகூத் ட்ஃஙு | அடியான் அளவை மீறி நடந்து கொள்கின்ற -*கற்கள், மரங்கள் போன்று*- வணங்கப்படுகின்றதாகவோ -*கெட்ட அறிஞர்கள் போன்று*- பின்பற்றப்படுகின்றதாகவோ -*அல்லாஹ்வுக்கு கட்டுப்படாத தலைவர்களைப் போன்று*- வழிப்படப்படுகின்றதாகவோ இருக்கும். தாகூத்கள் அதிகமாக உள்ளனர், பிரதானமாக ஐவர் காணப்படுகின்றனர்: அல்லாஹ்வால் சபிக்கப்பட்ட இப்லீஸ், தான் வணங்கப்படுவதை விரும்புகின்ற வணங்கப்படும் படைப்பு, தன்னை வணங்குமாறு மக்களை அழைப்பவன், மறைவான ஞானத்தில் தனக்கும் அறிவு இருப்பதாக வாதிடுபவன், அல்லாஹ் இறக்கியுள்ள சட்டத்திற்கு மாற்றமாக தீர்ப்பு வழங்குபவன். | |
| | | அல்லாஹ்வே மிக அறிந்தவன், முஹம்மத் நபி அவர்கள் மீதும் அவர்களுடைய குடும்பத்தவர், தோழர்கள் மீதும் அல்லாஹ்வின் ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக. | | |

அருளாளன் அன்புடையோன் அல்லாஹ்வின் பெயரால்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனைப் போற்றி, அவனிடம் உதவி வேண்டி, அவனிடம் மன்னிப்பும் கோருகிறோம். எம் ஆத்மாக்களின் தீங்குகளில் இருந்தும், எம் செயல்களின் கெடுதிகளில் இருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறோம். அல்லாஹ் யாரை நேர்வழியில் செலுத்திவிட்டானோ அவரை எவராலும் வழிகெடுக்க முடியாது. அவன் யாரை வழிகேட்டில் விட்டுவிட்டானோ அவருக்கு எவராலும் நேர்வழி காட்ட முடியாது. அல்லாஹ்வைத் தவிர வேறு வணக்கத்திற்குரியவன் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையேதுமில்லை என்றும், முஹம்மத்ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதருமாவார் என்றும் நான் சாட்சி கூறுகிறேன். (இவ்விறைவாழ்த்துக்குப்) பின்னர்!

# விளக்க உரைக்கு முன் ஒரு முன்னுரை

## இம்மூல நூலின் ஆசிரியர்

ஏகத்துவப் பிரச்சாரத்தை புதுப்பித்தவர் ஷேய்குல் இஸ்லாம் இமாம் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் இப்னு ஸுலைமான் அத்-தமீமீ.

அவரின் குறிப்புப் பெயர்: அபுல் ஹுஸைன்.

அவர் "உயைனஹ்" என்ற ஊரில் ஹி 1115 ஆம் ஆண்டில் பிறந்து, "திர்இய்யஹ்" என்ற ஊரில் ஹி 1206 ஆம் ஆண்டில் மரணித்தார்.

**நான்கு அடிப்படை விதிகள் என்ற மூல நூல் அறிவைத் தேடும் மாணவனின் மூல நூற்கள் என்ற தொடரில் இரண்டாவதாக கற்கவேண்டிய நூலாகும், பல காரணங்களால் இந்த நூலில் கவனம் செலுத்தப்பட்டு வந்துள்ளது. அவற்றுள்:**

எமது உலமாக்கள் அதை கற்குமாறு அறிவுரை கூறியிருப்பது

முன்சென்ற நல்ல உலமாக்களை பின்தொடர்தல்

கஷ்புஷ் ஷுபுஹாத் என்ற நூலின் சுருக்கமாகவும் அமைந்துள்ளது

அதில் எமது காலத்தில் வாழும் இணைவைப்பாளர்களின் வாதங்களுக்கு மறுப்பு உள்ளது

குழப்பமான வாதங்கள் மாணவனின் உள்ளத்தில் பாதிப்பை ஏற்படுத்தாமல் இருப்பதற்காக கஷ்புஷ் ஷுபுஹாத் (குழப்பமான வாதங்களை தெளிவுபடுத்தல்) என்ற நூலை கற்பதற்கு முன்னர் இந்த நூலை கற்றல்



## நான்கு அடிப்படை விதிகள் என்ற நூலின் உள்ளடக்கம்

அதனை மூன்றாக வகைப்படுத்தலாம். அவையாவன:

1- முன்னுரை (சுபீட்சத்தின் அடையாளம்)

2- ஏகத்துவத்தை கற்பதின் முக்கியத்துவம்

3- நான்கு அடிப்படை விதிகள்



# முதலாவது: முன்னுரை (சுபீட்சத்தின் அடையாளம்)

*பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்.*(1)

**(1) நூலாசிரியர் மூலத்தை அல்லாஹ்வின் பெயர் கொண்டு ஆரம்பித்ததற்கான காரணம்:**

1. அல்லாஹ்வின் வேதத்தையும் நபிமார்களையும் عَلَيۡهِمُ ٱلسَّلَامُ பின்பற்றும் நோக்கம்.

2. அல்லாஹ்வின் பெயர் கொண்டு தங்கள் நூற்களை ஆரம்பிக்கும் வழமையை கொண்டிருந்த அவருக்கு முன் வாழ்ந்த அறிஞர்களையும் ஸலப்களையும் பின்தொடர்வதற்காக.

3. அல்லாஹ்வின் சங்கைமிக்க பெயரைக் கொண்டு பரகத் பெற்றுக்கொள்வதற்காக.

இவ்வுலகிலும் மறுமையிலும் அல்லாஹ் உம்மை(2) பொறுப்பேற்று, பாதுகாத்து, நேசிக்க(3) வேண்டும் என்றும், நீர் எங்கிருந்தாலும் பரக்கத்செய்யப்பட்டவனாக(4) உம்மை அவன் ஆக்க வேண்டும் என்றும், எவர் கொடுக்கப்பட்டால் நன்றி செலுத்துவாரோ(5), மேலும், சோதிக்கப்பட்டால் பொறுமை செய்வாரோ(6) இன்னும், பாவம் செய்தால் மன்னிப்பு கேட்பாரோ அத்தகையோரில் உம்மையும் அவன் ஆக்க வேண்டும் என்றும் மகத்தான அர்ஷின் இரட்சகனான சங்கைமிக்க அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்.

(2) நூலாசிரியர் –அல்லாஹ் அவரை மன்னிப்பானாக- தனது முன்னுரையை அல்லாஹ்வின் நாமம் கூறிய பிறகு தனது வழக்கம் போல் அறிவை தேடும் மாணவனுக்கு பிரார்த்தனை செய்து ஆரம்பித்திருக்கிறார். இல்மைத் தேடுபவர்களின் விடயத்தில் அவருக்கிருக்கும் ஆர்வம், அன்பு, அவர்களுக்கு அனைத்து நலவுகளும் கிட்ட அவர்களுக்காக அல்லாஹ்வை பிரார்த்தித்தல் ஆகியவற்றிற்கு இது ஆதாரமாகும்.

(3) அல்லாஹ்வின் நேசர்கள் யாரெனில் ஈமான், தக்வா ஆகிய இரண்டையும் ஒரு சேரப் பெற்றவர்களாவர்.

ஷேய்குல் இஸ்லாம் இப்னு தைமியஹ் –ரஹிமஹுல்லாஹ்- கூறுகிறார்: எவர் ஈமான் உள்ளவராகவும் இறையச்சம் உள்ளவராகவும் இருக்கிறாரோ அவர் அல்லாஹ்வுக்கு வலியாக (இறைநேசராக) இருப்பார். ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்: **{அறிந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். அவர்கள் ஈமான் கொண்டு (அல்லாஹ்விடம்) பயபக்தியுடன் நடந்து கொள்வார்கள்.}** (அல்குர்ஆன் : 10:62-63)

(4) **பரக்கத்** என்பது வளர்ச்சி, அபிவிருத்தி.

**பரக்கத் தேடுதல் (தபர்றுக்)** என்பது வளர்ச்சி மற்றும் அபிவிருத்தியை வேண்டுதல் / தேடுதல்.

**பரக்கத் செய்யப்பட்டவர்** என்பவர் அவர் எங்கு சென்றாலும் அவர் மூலம் மற்றவர்கள் பயன்பெறுவர்.

பரகத் தேடுதல் இருவகைப்படும்:

மார்க்க அங்கீகாரம் பெற்ற பரகத் தேடுதல்.

தடைசெய்யப்பட்ட பரக்கத் தேடுதல், அதுதான் மார்க்க ரீதியாகவோ புலன் வழியாகவோ உறுதி செய்யப்படாதது. (அது சிறிய ஷிர்கின் வகைகளில் ஒன்று).

**மார்க்கம் உறுதி செய்தவை.** உதாரணமாக அல்-மஸ்ஜிதுல் ஹராம் மற்றும் அல்-மஸ்ஜிதுன் நபவியில் தொழுவதை போன்று.

**புலன்களால் உணரப்படுகின்றவை.** உதாரணமாக: மார்க்க அறிவு, பிரார்த்தனை போன்றவை; ஒரு மனிதனின் மார்க்க ஞானம், நன்மையின் பக்கம் அவன் செய்யும் பிரச்சாரம் ஆகியவற்றின் மூலம் பரகத் தேடுதல். இது ஒரு பரகத்தாகும்; ஏனெனில் நாம் அவனிடமிருந்து அதிக நன்மைகளை / பயன்களை பெறுகிறோம். உதாரணமாக ஷெய்குல் இஸ்லாம் மற்றும் ஏனைய இமாம்களின் நூல்களைப் போன்று. அவற்றில் அல்லாஹ் பரக்கத்தையும் பயன்களையும் ஏற்படுத்தினான். உம்மத் அவற்றைக் கொண்டு பயன் அடைந்தது

(5) அருட் பாக்கியமும் சோதனையே. இதற்கு பல ஆதாரங்கள் உள்ளன. அவற்றில் சில பின்வருமாறு:

**{கெடுதியை (துன்பங்களை)க் கொண்டும், நல்லவை (இன்பங்களை)க் கொண்டும் பரீட்சிப்பதற்காக உங்களை நாம் சோதிக்கிறோம்.}** (அல்குர்ஆன் : 21:35)

**{(ராணியின் சிம்மாசனமாகிய) அது தம் முன் நிலைபெற்றிருப்பதை (ஸுலைமானாகிய) அவர் கண்டபோது, "இது என் இரட்சகனின் பேரருளில் உள்ளதாகும், நான் அவனுக்கு நன்றி செலுத்துகின்றேனா, அல்லது நன்றி கெட்டவனாக இருக்கிறேனா? என்று என்னைச் சோதிப்பதற்காக (இவ்வாறு வழங்கியுள்ளான்.) மேலும், எவர் (அல்லாஹ்வுக்கு) நன்றி செலுத்துகிறாரோ அவர் நன்றி செலுத்துவதெல்லாம் (அதன் பலன்) அவருக்கே. இன்னும், எவர் (நன்றி செய்யாது) நிராகரிக்கிறாரோ (அது அவருக்கே கேடாகும், காரணம்) நிச்சயமாக என் இரட்சகன் (எவரிடமிருந்தும்) தேவையற்றவன், கண்ணியமுள்ளவன்" என்று கூறினார்.}** (அல்குர்ஆன் : 27:40)

**{ஆனால், மனிதனை அவனுடைய இரட்சகன் கண்ணியப்படுத்தி, பாக்கியம் அளித்து அவனைச் சோதிக்கும் போது அவன்: "என் இறைவன் என்னை கண்ணியப்படுத்தியுள்ளான்" என்று கூறுகிறான்.}** (அல்குர்ஆன் : 89:15)

((இஸ்ராஈலின் சந்ததியினரில் மூவரை அல்லாஹ் சோதிக்க நாடினான்...)) என்று ஆரம்பிக்கும் ஹதீஸிலும் இதற்கு ஆதாரம் உள்ளது.

**தவ்ஹீதுர் ருபூபிய்யஹ், மற்றும் தவ்ஹீதுல் உலூஹிய்யஹ் ஆகிய இரண்டுடனும் நிஃமத் (அருட் பாக்கியம்) தொடர்புபட்டதாகும் .**
அதற்கு நன்றி செலுத்துவது இரண்டு வகைப்படும்:

நிஃமத்துக்கு முன்னர் அல்லாஹ்வுடன் தொடர்புபட்டு இருத்தல்

நிஃமத்தை அழிப்பவன் அல்லாஹ் தான் என்று உறுதியாக நம்பி இருத்தல்; அடியானின் உள்ளம் அல்லாஹ் அல்லாதவர்களில் நம்பிக்கை வைக்காமலும், அல்லாஹ்விடமிருந்து மாத்திரமே நலவை வேண்டும் நிலையிலும் இருக்க வேண்டும். சுவனம் அல்லாஹ்விடம் மாத்திரமே வேண்டப்படுகிறது. காரணம் அதற்கு சொந்தக்காரன் அவனே. அதேபோன்றுதான் வாழ்வாதாரமும் (ரிஸ்க்) அவனிடம் மாத்திரமே தவிர வேண்டப்பட முடியாது.
**{இறந்து விடமாட்டானே அத்தகைய உயிருள்ளவனின் மீது (உமது காரியங்களை ஒப்படைத்து அவன் மீது (முழு) தவக்குல் வைப்பாயாக!}** (அல்குர்ஆன் : 25:58)
**{நிச்சயமாக அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்குகின்றவை உங்களுக்கு ரிஸ்க் (வாழ்வாதாரம்) அழிக்க சக்திபெறமாட்டா. ஆகவே, (உங்களுக்கு வேண்டிய) ரிஸ்zகை (வாழ்வாதாரத்தை) அல்லாஹ்விடம் தேடுங்கள்.}** அதாவது அல்லாஹ்விடம்; அவன் அல்லாதவர்களிடம் அல்ல. **{அவனை வணங்குங்கள். அவனுக்கு நன்றி செலுத்துங்கள்}** (அல்குர்ஆன் : 29:17)

நிஃமத் (அருட் பாக்கியம்) கிடைக்கப் பெற்ற பிறகு நன்றி செலுத்துதல். அது பின்வரும் முறைகளில் அமையும்:

**1-**உள்ளத்தின் மூலம்

**2-**நாவின் மூலம்

**3-**உடல் உறுப்புகள் மூலம்

**1- உள்ளத்தால்:** அல்லாஹ்வே நிஃமத்திற்கு சொந்தக்காரன், வாழ்வாதாரம் அளிப்பவன் அவனே என்றும், அடியானிடம் இருக்கும் ஒவ்வொரு அருட் பாக்கியமும் அல்லாஹ்விடம் இருந்து பெறப்பட்டது என்றும் உண்மையாக நம்பி, பூரணமாக ஏற்றுக்கொள்ளல்.

**2- நாவால்:** அல்லாஹ்வின் நிஃமத்தை பற்றி பேசுவதும் அதற்காக அவனைப் புகழ்வதும் அவனுக்கு நன்றி கூறுவதுமாகும்.
அல்லாஹ் கூறுகிறான்: **{மேலும், உம்முடைய இறைவனின் அருட் பாக்கியத்தை பற்றி (பிறருக்கு) அறிவித்துக் கொண்டிருப்பீராக).** (அல்குர்ஆன் 93:11)

**3- உடல் உறுப்புகளால்:** அவன் திருப்தியுறும் விதத்தில் அருட் பாக்கியத்தை பயன்படுத்துவதோடு, அவனை நெருங்குவதற்காக வழிபாடுகள் செய்து, அவன் கட்டளையை ஏற்று பாவங்களை தவிர்த்து இருத்தல்.

(5) ஏனெனில், பொறுமை செய்வது உம்மத்தின் ஏகமனதான கருத்தின்படி கட்டாய கடமையாகும்.



1. வெறுப்படைதல்: இது ஹராமானதாகும். இது பெரும் பாவங்களில் ஒன்றாகும். இது பின்வரும் வழிகளில் ஏற்படுகின்றது:




**உள்ளத்தால் வெறுப்படைவது:** இமாம் இப்னுல் கையும் கூறினார்: சில மனிதர்கள் தமது நாவுகளால் வெறுப்பை வெளிப்படுத்துவதற்கு தயங்குவர். ஆனாலும், தங்கள் இரட்சகனின் மீது அவர்கள் வைத்திருக்கும் கெட்ட எண்ணத்தின் காரணமாக அவர்களின் உள்ளங்களில் வெறுப்படைவர்; அவன் தன் உள்ளத்தால், என் இறைவன் எனக்கு அநீதி இழைத்து விட்டான்; என் ரப்பு எனக்கு பாக்கியம் செய்யவில்லை; என் இறைவன் என்னை தடுத்து விட்டான் போன்ற எண்ணங்களை சொல்லிக் கொண்டிருப்பான். சிலர் குறைவாகவும் இன்னும் சிலர் அதிகமாகவும் இவ்வாறு நடந்துகொள்வர். நீர் இதிலிருந்து ஈடேற்றம் பெற்றவரா? என்பதை நீர் உன் உள்ளத்தில் ஆய்வு செய்து பார்; அதிலிருந்து நீர் தப்பி இருந்தால் மிகப்பெரிய ஒரு பாவத்திலிருந்து தப்பி விட்டாய்.

**நாவினால் வெறுப்பை வெளிப்படுத்துதல்:** சப்தமிடுதல், ஒப்பாரிவைத்தல், சாபமிடுதல், அழிவை வேண்டுதல், திட்டுதல் போன்றவை மூலம் ஏற்படுகின்றது.

**உடல் அங்கங்களால் வெறுப்பை வெளிப்படுத்தல்:** கன்னத்தில் அறைதல், ஆடைகளை கிழித்துக் கொள்ளல், முடிகளை பிடுங்குதல் போன்றவை.

2. பொறுமை காத்தல்: அதன் சட்டம் உம்மத்தின் ஏகமனதான முடிவின்படி வாஜிப் - கட்டாயமானதாகும். உள்ளத்தாலும் நாவினாலும் ஏனைய அங்கங்களாலும் பொறுமை செய்வது கட்டாயமானதாகும். இமாம் அஹ்மத் கூறுகிறார்: "அல்குர்ஆனில் சுமாராக தொண்ணூறு இடங்களில் பொறுமை பற்றி வந்துள்ளது. உம்மத்தின் ஏகமனதான கருத்தின்படி அது வாஜிபாகும். அது ஈமானின் அரை பாதியாகும். ஏனெனில், ஈமான் இரு பாதிகள்: பொறுமை ஒரு பாதியும் நன்றி செலுத்தல் மறு பாதியுமாகும்". [மதாரிஜுஸ் ஸாலிகீன் - இப்னுல் கையிம்]

3. பொருந்திக் கொள்ளல் = திருப்தி அடைதல்: இதன் சட்டம் முஸ்தஹப் எனும் விரும்பத்தக்கதாகும். இது பொறுமையை விட உயர்ந்த தரமாகும்.

4. நன்றி செலுத்தல்: இதன் சட்டம் முஸ்தஹப் ஆகும். இதுவே படித்தரங்களில் மிகச் சிறந்ததும் மிகப் பூரணமானதுமாகும்.

## இரண்டாவது: நான்கு அடிப்படை விதிகள்

அல்லாஹ் அவனை வழிபடுவதற்கு உமக்கு வழி காட்டுவானாக! அறிந்து கொள்ளவும்: ஹனீபிய்யஹ் என்பது இப்ராஹீம் நபியின் மார்க்கமாகும். அதாவது அல்லாஹ்வுக்கு மார்க்கத்தைக் தூய்மைப்படுத்தி அவனை மாத்திரம் வணங்குவதை குறிக்கும். அல்லாஹ் அனைத்து மனிதர்களுக்கும் அதையே கட்டளை இட்டு இருக்கின்றான். அதற்காகவே அவர்களை படைத்துள்ளான். அல்லாஹ் கூறுகிறான்: {**மனு, ஜின் வர்க்கங்களை என்னை வணங்குவதற்காகவே அன்றி நான் படைக்கவில்லை**}.(1)

(1) நாம் ஏன் தவ்ஹீதை கற்கிறோம் என்பதை நூலாசிரியர்رحمه الله விளக்குகிறார்.

அல்லாஹ் தன்னை வணங்குவதற்காக உம்மை படைத்திருக்கிறான் என்பதை நீர் அறிந்து கொண்டால், அடுத்ததாக வணக்கத்தை பொறுத்தவரை ஏகத்துவத்துடன் இருந்தாலே அன்றி அதற்கு வணக்கம் என்று சொல்லப்பட மாட்டாது என்பதை அறிந்துகொள்ளவும். இது எவ்வாறெனில் தொழுகையை சுத்தத்துடன் நிறைவேற்றினாலே அன்றி தொழுகை என்று அழைக்கப்படமாட்டதோ அது போன்றாகும். எனவே, தொடக்கு ஏற்பட்டால் எவ்வாறு சுத்தம் முறிந்துவிடுமோ அதுபோன்றே வணக்கத்தில் இணைவைத்தல் நுழைந்தால் அது கெட்டுவிடும். இணைவைத்தல் வணக்கத்தில் கலந்தால் அதனை=

=வீணடித்து விடும். நற்செயல்களை அழித்துவிடும். அதற்குரியவர் நிரந்தர நரகத்திற்கு செல்பவர்களில் ஒருவராக ஆகிவிடுவார். இதனை நீர் தெரிந்து கொண்டால் அது பற்றிய அறிவைப் பெற்றுக் கொள்வது உம் மீது இருக்கும் மிக முக்கியமான கடமை என்பதை புரிந்து கொள்வாய். இணைவைத்தல் என்ற இந்த வலையிலிருந்து அல்லாஹ் உம்மை விடுவிக்க போதுமானவன். அதைப் பற்றி அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்: {**நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்க மாட்டான் அதைத் தவிர உள்ளதை (பாவங்களை) அவன் நாடியவர்களுக்கு மன்னிப்பான்**}.

அல்லாஹ் தன் வேதத்தில் குறிப்பிட்டிருக்கும் நான்கு அடிப்படை விதிகளை புரிந்து கொள்வதனால் இதைப் பற்றிய அறிவை நீ பெற்றுக் கொள்ளலாம்.

**முதல் அடிப்படை விதி:** அல்லாஹ் தான் படைப்பாளன், திட்டமிடுபவன் என்பதை அல்லாஹ்வின் தூதர் எந்த காபிர்களுடன் போராடினார்களோ அவர்களும் ஏற்றிருந்தனர். எனினும் அந்த நம்பிக்கை அவர்களை இஸ்லாத்திற்குள் கொண்டு வரவில்லை என்பதை நீர் அறிந்து கொள்ள வேண்டும்.

ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் வார்த்தையாகும்:

**{"வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு வாழ்வாதாரமளிப்பவன் யார்? அல்லது (உங்கள்) செவிப்புலனையும், பார்வைகளையும் சொந்தமாக்கிக் கொண்டிருப்பவன் யார்?" இறந்ததிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துபவனும் உயிருள்ளதிலிருந்து இறந்ததை வெளிப்படுத்துபவனும் யார்? (அகிலத்தாரின்) சகல காரியங்களைத்=**

**= திட்டமிட்டு நிகழ்த்துபவனும் யார்?" என நபியே! நீர் (அவர்களைக்) கேட்பீராக!! அ(தற்க)வர்கள் அல்லாஹ்தான் என்று கூறுவார்கள், அவ்வாறாயின், "(அவனுக்கு) நீங்கள் பயப்படமாட்டீர்களா?" என்று நீர் கூறுவீராக!** (அல்குர்ஆன் 10:31) (1)

(1) நபி -ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்- அவர்கள் எந்த நிராகரிப்பாளர்களுக்கு அனுப்பப்பட்டார்களோ அவர்கள் தவ்ஹீதுர் ருபூபிய்யஹ்வை ஏற்று இருந்தும் அவர்களுடன் அல்லாஹ்வின் தூதர் -ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்- போரிட்டார்கள். அவர்களுக்கும் நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்களுக்கும் இடையில் இருந்த பிணக்கு தவ்ஹீதுல் உலூஹிய்யஹ்விலேயாகும். வணக்கவழிபாடுகளில் எதையேனும் ஒன்றை ஒருவர் அல்லாஹ் அல்லாதவருக்கு செலுத்தினால் அவர் இணைவைத்தவரும் நிராகரிப்பாளருமாவார்.

**இரண்டாவது அடிப்படை விதி:** நாம் அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பதும் நெருங்குவதும் அவர்கள் அல்லாஹ்விடத்தில் நெருக்கத்தை பெற்றுத் தருவார்கள் மற்றும் சிபாரிசு செய்வார்கள் என்பதற்காகவே என்று அந்நிராகரிப்பாளர்கள் கூறிவந்தனர்.

நெருக்கத்தை பெற்றுத் தருவார்கள் என்று அவர்கள் கூறியதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும் :

**{இன்னும், அவனையன்றி (மற்றவர்களைப்) பாதுகாவலர்களாக எடுத்துக்=**

**=கொண்டிருக்கிறார்களே அத்தகையவர்கள், "எங்களை அவர்கள் நெருக்கத்தால் அல்லாஹ்வுக்கு சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காகவேயன்றி அவர்களை நாங்கள் வணங்கவில்லை" (என்று கூறுகின்றனர்), எதில் அவர்கள் வேறுபட்டுக் கொண்டிருக்கிறார்களோ அது பற்றி, நிச்சயமாக அல்லாஹ் (மறுமையில்) அவர்களுக்கிடையில் தீர்ப்பளிப்பான், நிச்சயமாக அல்லாஹ் எவன் (உண்மையை) மிக்க மறுக்கிறவனாக, பொய்யனாக இருக்கிறானோ அவனை நேர் வழியில் செலுத்தமாட்டான்.}** (அல்குர்ஆன் 39:3) (1)

(1) இணைவைப்பையும் குப்ரையும் செய்தவர்கள் தங்களின் பொய்யான வணக்கத்துக்குரியவற்றை தாம் பிரார்த்திப்பது எல்லாம் அவை மூலம் அல்லாஹ்விடம் நெருக்கத்தை பெறுவதற்கும் அவற்றின் சிபாரிசை பெற்றுக்கொள்வதற்கும் என்று வாதிட்டனர். இதன் காரணமாகவே நபி -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் அவர்களை நிராகரிப்பாளர்கள் என்று அடையாளப்படுத்தி அவர்களுடன் போரிட்டார்கள்.

சிபாரிசு செய்வார்கள் என்று அவர்கள் கூறியதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் வார்த்தையாகும்:

{**மேலும், அல்லாஹ்வையன்றி, தங்களுக்கு இடர் அளிக்காதவற்றை இன்னும், தங்களுக்குப் பலன் அளிக்காதவற்றை அவர்கள் வணங்குகிறார்கள், "இவர்கள் அல்லாஹ்விடத்தில் எங்களுக்கு பரிந்துரையாளர்கள்" என்றும் அவர்கள் கூறுகின்றனர்**} (அல்குர்ஆன் : 10:18)

சிபாரிசு (ஷபாஅத்) இரு வகைப்படும்: 1- (மார்க்கத்தில்) உறுதி செய்யப்பட்டுள்ள சிபாரிசு. 2- மறுக்கப்பட்டுள்ள சிபாரிசு. (1)

(1) ஷஃபாஅத் (சிபாரிசு) என்பது அரபு மொழியில் இணைத்தல், ஒன்றை இரண்டாக மாற்றுதல் என்ற அர்த்தங்களைத் தரும். மார்க்க வழக்கில்: ஒரு பயனை அடைந்து கொள்ளும் விடயத்தில் அல்லது பாதிப்பை தடுக்கும் விடயத்தில் இன்னொருவருக்காக மத்தியஸ்தம் வகிப்பதை குறிக்கும்.

(இஸ்லாத்தில்) மறுக்கப்பட்டிருக்கும் சபாஅத் (பரிந்துரை): அல்லாஹ்வால் மாத்திரமே செய்வதற்கு முடியுமான விடயங்களில் அல்லாஹ் அல்லாதவர்களிடம் வேண்டுதல் .

ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்:
{**விசுவாசங்கொண்டோரே! எந்த விதமான பேரமும், நட்பும், பரிந்துரையும் இல்லாத நாள் வருமுன் உங்களுக்கு நாம் அளித்தவற்றிலிருந்து செலவு செய்யுங்கள். இன்னும் நிராகரிக்கக் கூடியவர்கள் தாம் அநியாயக்காரர்கள்**}. (அல்குர்ஆன் 2:254)

மார்க்கத்தில் உறுதி செய்யப்பட்டுள்ள ஷபாஅத் என்பது அல்லாஹ்விடம் வேண்டப்படுவதும், ஷபாஅத்து செய்பவரை அதன் மூலம் கண்ணியப்படுத்தும் நோக்கிலும், எவருக்காக ஷஃபாஅத் செய்யப்படுகிறதோ அவரின் சொல்லையும் செயலையும் அல்லாஹ் பொருந்தி இருப்பதோடு அவனின் அனுமதிக்கு பிறகு அது நடைபெறும்.

பின்வருமாறு அல்லாஹ் கூறியிருப்பதை போன்று: {**அவனது அனுமதியின்றி அவனிடத்தில் ஷபாஅத் செய்யக்கூடியவர் எவர் தான் இருக்கிறார்**} (அல்குர்ஆன் 2:255)

## ஷஃபாஅத் சிபாரிசின் வகைகள்

**1) படைக்கப்பட்ட ஒருவனிடம் அவனது ஆற்றலுக்கு உட்பட்ட விடயங்களில் உலகில் சிபாரிசு செய்யுமாறு வேண்டல்.**

இது நான்கு நிபந்தனைகளின் அடிப்படையில் அனுமதிக்கப்பட்டது:

**1-அவர் அங்கு சமூகம் தந்திருக்க வேண்டும்.**

**2-உயிர் உள்ளவராக இருக்க வேண்டும்.**

**3-அதனை செய்வதற்கு ஆற்றல் பெற்றவராக இருக்க வேண்டும்.**

**4-அவரை ஒரு சபப் ஆக / காரணமாக மாத்திரம் கருதுதல்.**

**2) மறுக்கப்பட்டுள்ள சிபாரிசு**

இதனை அல்குர்ஆன் மறுக்கிறது. இதுதான் அல்லாஹ்வுக்கு மாத்திரமே ஆற்றலுள்ள விடயங்களில் அல்லாஹ் அல்லாத ஒருவரிடம் வேண்டும் சிபாரிசு / ஷஃபாஅத் ஆகும். அதன் தீர்ப்பு பெரும் இணைவைத்தல் என்பதே.

**3) மார்க்கத்தில் இருப்பதாக கூறப்பட்டுள்ள சிபாரிசு**

அது (மறுமையில்) அல்லாஹ்விடம் வேண்டப்படுவதாகும். பின்வரும் நிபந்தனைகளை உள்ளடக்கியிருக்கும்:

**1-சிபாரிசு செய்வதற்கான அல்லாஹ்வின் அனுமதி இருத்தல்**

**2-சிபாரிசு செய்பவரை அல்லாஹ் பொருந்திக் கொண்டிருத்தல்**

**3-எவருக்காக சிபாரிசு செய்யப்படுகிறதோ அவரையும் அல்லாஹ் பொருந்தி இருத்தல்.**

**3) மார்க்கத்தில் இருப்பதாக கூறப்பட்டுள்ள சிபாரிசு**

| | |
|---|---|
| நபியவர்களுக்கு என்று பிரத்தியேகமாக இருக்கும் சிபாரிசுகள். அவற்றில் வேறு எவரும் பங்கு கொள்ள மாட்டார். | தூதர்கள், நபிமார்கள், மலக்குமார்கள், ஏகத்துவவாதிகள், சிறு குழந்தைகள் ஆகியோருக்கு பொதுவாக அனுமதிக்கப்படும் ஷபாஅத் |
| 1-மிகப்பெரும் ஷபாஅத் | 1- ஏகத்துவ வாதிகளின் அந்தஸ்துக்களை உயர்த்துவதற்காக வேண்டப்படும் சிபாரிசு |
| 2-தாங்களின் பெரிய தந்தை அபூதாலிபின் தண்டனையை குறைக்குமாறு வேண்டிக்கொள்ளும் சிபாரிசு | 2- ஏகத்துவவாதிகளில் நரகத்திற்கு தகுதியானவர்கள் அதில் நுழையாமல் இருப்பதற்காக வேண்டப்படும் சிபாரிசு |
| 3-சுவனத்தின் வாயில்கள் திறக்குமாறு வேண்டும் சிபாரிசு | 3- நரகம் நுழைந்த ஏகத்துவவாதிகள் அதிலிருந்து வெளியேறுவதற்காக வேண்டப்படும் சிபாரிசு |

**மூன்றாவது அடிப்படை விதி**(1): நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்- அவர்கள் எந்த மக்கள் மத்தியில் தோன்றினார்களோ அவர்கள் தங்கள் வணக்கவழிபாடுகளில் வேறுபட்டவர்களாக இருந்தனர். சிலர் வானவர்களை வணங்கினர். வேறு சிலரோ நபிமார்களையும் நல்லடியார்களையும் வணங்கினர். மேலும் சிலர் மரங்களையும் கற்களையும் வணங்கினர். இன்னும் சிலர் சூரியனையும் சந்திரனையும் வணங்கினர். அவர்கள் அனைவருடனும் அல்லாஹ்வின் தூதர் -ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்- அவர்கள் போராடினார்கள். அவர்களுக்கு மத்தியில் பிரித்துப் பார்க்கவில்லை.

(1) இணைவைத்தல் என்பது சிலை வணக்கத்தில் மாத்திரம்தான் ஏற்படும் என்று சொல்பவர்களுக்கு மறுப்பு கூறுவதற்கு இந்த விதி மிகத் தெளிவான ஆதாரமாக அமைந்துள்ளது.

சிலைகள் தொடர்பாக மாத்திரமல்லாது அக்கால கட்டத்தில் பொய்யாக வணங்கப்பட்ட ஏனையவை விடயத்திலும் மார்க்க ஆதாரங்கள் வந்துள்ளன. தூதர் -ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்- அவற்றுக்கிடையில் வேறுபடுத்தி பார்க்கவில்லை. அவை அனைத்தையும் தாகூத்களாகவே கருதினார்கள். அதனால் மார்க்கம் முழுமையாக அல்லாஹ்வுக்கு மாத்திரம் இருக்க வேண்டும் என்பதற்காக எந்த விதிவிலக்கும் இன்றி அவர்களுடன் போராடினார்கள்.

ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்: **{(இந்நிராகரிப்போரின் துன்புறுத்தலெனும்) குழப்பம் ஏற்படாமல் (இருக்கவும்,) மார்க்கம் முற்றிலும் அல்லாஹ்விற்கு (நிலைபெற்றதாக) ஆகும் வரையிலும் (மக்காவாசிகளாகிய நிராகரிக்கும்) அவர்களுடன் யுத்தம் புரியுங்கள்}**. (அல்குர்ஆன் 8:39)

சூரியனையும் சந்திரனையும் வணங்கிக்கொண்டு இருந்ததற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும் :

**{இரவும், பகலும், சூரியனும், சந்திரனும் (அல்லாஹ்வைப்பற்றி அறிவிக்கக்கூடிய) அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளவையாகும், நீங்கள் சூரியனுக்கும், சந்திரனுக்கும் ஸஜ்தா செய்யவேண்டாம், நீங்கள் அல்லாஹ்வையே வணங்குபவர்களாக இருந்தால், அவற்றை படைத்தவனாகிய அவனுக்கே ஸஜ்தா செய்யுங்கள்}**. (அல்குர்ஆன் 41:37)

வானவர்களை வணங்கியதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும் :

**{மேலும், “மலக்குகளையும், நபிமார்களையும் (வணக்கத்திற்குரிய தெய்வங்களான) ரப்புகளாக எடுத்துக் கொள்ளுங்கள்” என்றும், உங்களுக்கு அவர் கட்டளையிட மாட்டார்}** (அல்குர்ஆன் 3:80)

நபிமார்களை வணங்கியதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்று:

**{அல்லாஹ் (மறுமை நாளில் ஈஸாவிடம்) “மர்யமுடைய மகன் ஈஸாவே! அல்லாஹ்வையன்றி என்னையும், என்னுடைய தாயையும் இரண்டு வணக்கத்திற்குரியவர்களாக எடுத்துக் கொள்ளுங்கள் என்று மனிதர்களுக்கு நீர் கூறினீரா?” என்று கேட்பான். (அதற்கு) “நீ மிகப்பரிசுத்தமானவன், எனக்கு ஒரு சிறிதும் உரிமை இல்லாததை நான் (ஒருபோதும்) கூறுவதற்கு எனக்குத் தகுதி இல்லை, அவ்வாறு நான் கூறியிருந்தால், நிச்சயமாக நீ அதனை அறிந்திருப்பாய், என் உள்ளத்தில் உள்ளதை நீ நன்கறிவாய், உன் உள்ளத்திலுள்ளதை நான் அறிய மாட்டேன், நிச்சயமாக நீதான் மறைவானவற்றை மிக்க அறிந்தவன்” என்று கூறுவார்.}** (அல்குர்ஆன் 5:116)

நல்லடியார்களை வணங்கியதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்:

**{எவர்களை (இணைவைத்துக் கொண்டிருப்போரான) அவர்கள் அழைக்கிறார்களோ அத்தகையோர்– தங்கள் இரட்சகனின்பால், (நற்செயல்கள் செய்வது கொண்டு) அவர்களில் யார் மிக்க நெருக்கமானவர்கள் என்று நெருக்கத்தை தேடுகிறார்கள்; அவனது அருளை ஆதரவும் வைக்கிறார்கள்; அவனது வேதனையை பயப்படவும் செய்கிறார்கள்.}** (அல்குர்ஆன் 17:57)

மரங்களையும் கற்களையும் வணங்கியதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்:

**{நீங்கள் (வணங்கும்) லாத்தையும் உஸ்ஸாவையும் கண்டீர்களா? மற்றொன்றாகிய மூன்றாவதான மனாத்தையும் (நீங்கள் கண்டீர்களா? அவற்றால் உங்களுக்கு ஏதும் நன்மையோ தீமையோ செய்வதற்குத்தான் முடியுமா?)}** (அல்குர்ஆன் 53:19-20)

அபு வாகித் அல்-லைஸி -ரழியல்லாஹு அன்ஹு- கூறுகிறார்: நாங்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் ஹுனைன் யுத்தத்திற்கு சென்றோம். அப்போது நாம் நிராகரிப்பில் இருந்து புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்களாக இருந்தோம். இணைவைப்பாளர்களுக்கு ஒரு இலந்தை மரம் இருந்தது. (பாக்கியம் பெறும் நோக்கில்) அதன் இடத்தில் அவர்கள் தரித்திருப்பார்கள்; அதில் தங்கள் ஆயுதங்களை கொழுவி கொள்வார்கள். கொழுவப்படுபவைக்குறிய மரம் என்று அதற்குச் சொல்லப்படும். நாமும் ஒரு இலந்தை மரத்திற்குப் பக்கத்தில் நடந்து சென்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் அவர்களே! கொழுவப்படுபவைக்குறிய மரம் அவர்களுக்கு இருப்பதைப் போன்று எங்களுக்கும் ஒரு மரத்தை ஏற்படுத்தித் தாருங்கள் என்று கூறினோம்.

**நான்காவது அடிப்படை விதி:** எமது காலத்து இணைவைப்பாளர்கள் ஆரம்பகால இணைவைப்பாளர்களை விட கடுமையாக இணைவைக்கின்றனர். ஏனெனில் ஆரம்ப கால இணைவைப்பாளர்கள் செழிப்பான நிலையில் இணைவைப்பர். கஷ்டமான நிலையில் அல்லாஹ்வை= மாத்திரம் வணங்குவர். நமது காலத்தில் வாழும் இணைவைப்பாளர்களோ செழிப்பிலும் கஷ்டத்திலும் எல்லா நிலையிலும் இணைவைக்கின்றனர். ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வின் கூற்றாகும்:

{**மேலும், அவர்கள் கப்பலில் ஏறி(ய பின் ஆபத்தில் சிக்கி)க் கொண்டால், அவர்கள் முற்றிலும் வணக்கத்தை அவனுக்கே கலப்பற்றதாக ஆக்கியவர்களாக அல்லாஹ்வை அழைக்கின்றனர், அவன் அவர்களைக் கரையின் பால் (சேர்த்து வைத்துக்) காப்பாற்றிய பொழுது, அவனுக்கே அவர்கள் இணைவைக்கின்றனர்.**}

(அல்குர்ஆன் 29:65)(1)

அல்லாஹ்வே மிக அறிந்தவன். முஹம்மத் அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தவர் மற்றும் தோழர்கள் மீதும் அல்லாஹ் ஸலவாத்தும் ஸலாமும் சொல்வானாக.

(1) எமது காலத்தில் வாழுகின்ற இணைவைப்பாளர்களின் நிலைப்பாடு எந்த அளவு பாரதூரமானது என்பதை நூலாசிரியர் -ரஹிமஹுல்லாஹ்- இந்த விதியின் ஊடாக விளக்கியுள்ளார். காரணம், இவர்கள் ஆரம்பகால இணைவைப்பாளர்களை விட கடுமையாக இணைவைக்கின்றனர். ஏனெனில், எமது காலத்தில் வாழும் இணைவைப்பாளர்கள் கஷ்டம் மற்றும் செழிப்பு ஆகிய இரு நிலையிலும் அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கின்றனர். கடந்த காலத்தில் வாழ்ந்த இணைவைப்பாளர்களோ செழிப்பில் இணைவைப்பார்கள். கஷ்டமான சூழ்நிலையில் அல்லாஹ்வையும் அவனுடைய ஓர்மைதுவத்தையும் ஏற்றுக் கொள்வார்கள்.

நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்- அவர்கள் எந்த நிராகரிப்பாளர்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டார்களோ அவர்கள் இவர்களை விட இணைவைப்பில் குறைவானவர்களாக இருந்தனர். எனினும், அல்லாஹ் அவர்களை நிராகரிப்பாளர்கள் என்றே கூறினான். அவ்வாறாயின் சந்தோஷமான மற்றும் துன்பமான இரு நிலையிலும்; எப்போதும் இணை வைக்கக் கூடியவர்கள் பற்றி என்ன நினைக்கிறீர்? எனவே, அப்படியானவர்கள் நிராகரிப்பாளர்களாக இருப்பதற்கு மிகத் தகுதியானவர்கள்.

**நான்கு அடிப்படை விதிகள். அவை கஷ்புஷ் ஷுப்ஹாத் என்ற நூலின் சுருக்கமுமாகும்.**

**முன்னுரை அதில் சுபீட்சத்தின் அடையாளம் குறிப்பிடப்பட்டுள்ளது.**

**1-வழங்கப்பட்டால் நன்றி செலுத்துவான்**

அருட் பாக்கியம் ஒரு சோதனையாகும். ஆதாரம்: {நல்லதைக் கொண்டும் தீயதை கொண்டும் சோதிப்பதற்காக உங்களை பரீட்சிப்போம்}.

**அருட் பாக்கியத்திற்கு நன்றி செலுத்தல்**

| | |
|---|---|
| தவ்ஹீதுர் ருபூபிய்யஹ் உடன் சம்பந்தப்பட்டது | அல்லாஹ்விடமே அன்றி சுவனத்தை வேண்ட முடியாது. காரணம் அவன் தான் அதற்கு சொந்தக்காரன். அதே போன்று தான் அவனிடமிருந்தே தவிர வாழ்வாதாரத்தையும் (رزق) வேண்ட முடியாது. அதனால் அவன் அல்லாதவர்களை தவிர்த்து அவனுடன் மாத்திரம் உள்ளத்தை தொடர்புபடுத்தி வைத்திருப்பது அவசியம். |
| தவ்ஹீதுல் உலூஹிய்யஹ் உடன் சம்பந்தப்பட்டது | உள்ளத்தினால் நன்றி கூறல்: தனக்கு கிடைத்திருக்கின்ற ஒவ்வொரு அருட் பாக்கியமும் அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது. வேறு எவரிடமிருந்தும் அல்ல என்பதை நம்பி ஏற்றுக் கொள்ளுதல். |
| | நாவினால் நன்றி கூறல்: {இது என் இறைவனின் அருட் பாக்கியத்தில் இருந்தும் உள்ளது நான் நன்றி செலுத்துகிறேனா அல்லது நன்றி கெட்டு நடக்கிறேனா என்று சோதிப்பதற்காகவே}. |
| | உடல் உறுப்புக்களால் நன்றி செய்தல்: அருட் பாக்கியங்களை வழங்கிய அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் விதத்தில் அவற்றை செலவு செய்தல். ஒவ்வொரு அருட் பாக்கியத்தையும் அதற்கேற்ப செலவிடல் வேண்டும். செல்வம் என்ற அருட் பாக்கியத்துக்கு நன்றி செய்வது அதனை அல்லாஹ்வுக்கு வழிபடும் விடயங்களில் செலவு செய்வதாகும். கல்வி எனும் அருட் பாக்கியத்திற்கு நன்றி செய்வதானது அதனை கேட்பவர்களுக்கு வழங்குவதாகும். சொல்லாலோ செயலாலோ இதனை செய்ய வேண்டும். |

**நான்கு அடிப்படை விதிகள். அவை கஷ்புஷ் ஷுப்ஹாத் என்ற நூலின் சுருக்கமுமாகும்**

**முன்னுரை அதில் சுபீட்சத்தின் அடையாளம் குறிப்பிடப்பட்டுள்ளது.**

**2-சோதனைக்குள்ளானால் பொறுமையை கடைபிடிப்பான்**

**சோதனைகள் ஏற்படும் போது மனிதர்களின் நிலைகள்**

வெறுப்படைதல்: இதற்குரிய தீர்ப்பு இது பெரும் பாவம் என்பதாகும். சில போது சிறிய ஷிர்க் வரை செல்லலாம். பின்வரும் வழிகளில் வெறுப்படைதல் ஏற்படுகின்றது: உள்ளத்தால், நாவினால், உடல் உறுப்புகளால்.

பொறுமை செய்தல்: அதன் சட்டம் உம்மத்தின் ஏகமனதான முடிவின்படி வாஜிப்- கட்டாயமானதாகும். உள்ளத்தாலும் நாவினாலும் ஏனைய அங்கங்களும் பொறுமை செய்தல் வேண்டும். பொறுமையின் சுவை கசப்பாக இருந்தாலும் அதன் இறுதி முடிவுகள் தேனைவிட இனிமை.

பொருந்திக் கொள்ளல் = திருப்தி அடைதல்: இதன் சட்டம் முஸ்தஹப் எனும் விரும்பத்தக்கதாகும். ஒருவன் தன் இரட்ச்சகன் மீது பூரண திருப்தி அடையும் போது தனக்கு நேர்ந்த அனைத்தும் அல்லாஹ்விடம் இருந்தே நிகழ்ந்தது என்றும் அவன் அடியானின் மீது விதிக்கும் அனைத்து விதிகளும் நன்மைக்கே என்றும் அறிந்துகொள்வான்.

நன்றி செலுத்தல்: இதுவே படித்தரங்களில் மிக உயர்ந்ததும் அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானதும். இப்பண்புள்ளவர் நன்றியுள்ள அல்லாஹ்வின் நல்லடியார்களில் ஒருவராக இருப்பார்.

**3-பாவம் செய்தால் மன்னிப்புக்கேட்பான்**

**- நாம் ஏன் தவ்ஹீதை கற்கிறோம்?**

**- ஷிர்கின் அபாயம்**

- ஹனீபிய்யஹ் என்பது இப்ராஹீம் நபியின் மார்க்கமாகும்.
- அல்லாஹ் தன்னை வணங்குவதற்காகவே உன்னை படைத்திருக்கிறான்.
-வணக்கம் ஏகத்துவத்துடன் இருந்தாலே அன்றி அதற்கு வணக்கம் என்று சொல்லப்பட மாட்டாது.
- வணக்கத்தில் இணைவைத்தல் கலந்தால் அதனை வீணடித்து விடும். நற்செயல்களை அழித்துவிடும். அதற்குரியவர் நிரந்தர நரகத்திற்கு உரியவராக ஆகிவிடுவார்.
- அது பற்றிய அறிவைப் பெற்றுக் கொள்வது உன் மீது இருக்கும் மிக முக்கியமான கடமை.

<table>
<tr><td rowspan="4">நான்கு அடிப்படை விதிகள். அவை கஷ்புஷ் ஷுப்ஹாத் என்ற நூலின் சுருக்கமாகும்</td><td rowspan="4">நான்கு அடிப்படை விதிகள்</td><td>முதல் அடிப்படை விதி: அல்லாஹ்வின் தூதர் எந்த காபிர்களுடன் போராடினார்களோ அவர்களும் தவ்ஹீதுர்-ருபூபிய்யஹவை ஏற்றிருந்தனர். தவ்ஹீதுல்-உலூஹிய்யஹ்வை அவர்கள் ஏற்கவில்லை. அந்த நம்பிக்கை அவர்களை இஸ்லாத்திற்குள் கொண்டு வரவில்லை.</td></tr>
<tr><td>இரண்டாவது அடிப்படை விதி: அல்லாஹ்விடத்தில் நெருக்கத்தை பெறுவதற்கும் சிபாரிசை பெற்றுக்கொள்வதற்குமே அந்நிராகரிப்பாளர்கள் சிலைகளை வணங்கினர்.</td></tr>
<tr><td>மூன்றாவது அடிப்படை விதி: நபிகள் நாயகம் -ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்- அவர்கள் எந்த மக்கள் மத்தியில் தோன்றினார்களோ அவர்கள் தங்கள் வணக்கவழிபாடுகளில் ஒருவருக்கொருவர் வேறுபட்டவர்களாக இருந்தனர். அவர்களிடம் காணப்பட்ட ஒரு ஷிர்க்குக்கும் இன்னொரு ஷிர்க்குக்கும் மத்தியில் பிரித்துப் பார்க்கவில்லை.</td></tr>
<tr><td>நான்காவது அடிப்படை விதி: எமது காலத்து இணைவைப்பாளர்களின் இணைவைப்பு ஆரம்பகால இணைவைப்பாளர்களின் இணைவைப்பை விட கடுமையாக உள்ளது.</td></tr>
</table>

அருளாளன் அன்புடையோன் அல்லாஹ்வின் பெயரால்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனைப் போற்றி, அவனிடம் உதவி வேண்டி, அவனிடம் மன்னிப்பும் கோருகிறோம். எம் ஆத்மாக்களின் தீங்குகளில் இருந்தும், எம் செயல்களின் கெடுதிகளில் இருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறோம். அல்லாஹ் யாரை நேர்வழியில் செலுத்திவிட்டானோ அவரை எவராலும் வழிகெடுக்க முடியாது. அவன் யாரை வழிகேட்டில் விட்டுவிட்டானோ அவருக்கு எவராலும் நேர்வழி காட்ட முடியாது. அல்லாஹ்வைத் தவிர வேறு வணக்கத்திற்குரியவன் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையேதுமில்லை என்றும், முஹம்மத்ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதருமாவார் என்றும் நான் சாட்சி கூறுகிறேன். (இவ்விறைவாழ்த்துக்குப்) பின்னர்!

## விளக்க உரைக்கு முன் ஒரு முன்னுரை

### இம்மூல நூலின் ஆசிரியர்

ஏகத்துவப் பிரச்சாரத்தை புதுப்பித்தவர் ஷேய்குல் இஸ்லாம் இமாம் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் இப்னு ஸுலைமான் அத்-தமீமீ.

அவரின் குறிப்புப் பெயர்: அபுல் ஹுஸைன்.

அவர் "உயைனஹ்" என்ற ஊரில் ஹி 1115 ஆம் ஆண்டில் பிறந்து, "திர்இய்யஹ்" என்ற ஊரில் ஹி 1206 ஆம் ஆண்டில் மரணித்தார்.

## நாம் ஏன் ஏகத்துவத்தை கற்கவேண்டும்?

| | |
|---|---|
| அது இல்லாமல் எந்த அமலையும் அல்லாஹ் ஏற்றுக்கொள்ளமாட்டான் | அதற்காகத்தான் அல்லாஹ் எம்மை படைத்துள்ளான் |
| நன்மைகளை அதிகரிக்க ஒரு காரணமாக அமைந்துள்ளது | ஏகத்துவவாதியைத் தவிர எவரும் சுவனம் நுழையமாட்டார் |
| நேர்வழிக்கும் அச்சமற்ற நிலை தொடர்வதற்கும் காரணமாகும் | பாவங்கள் மன்னிக்கப் படுவதற்கு ஒரு காரணமாகும் |
| நபி ﷺ அவர்களின் சிபாரிசு கிடைப்பதற்கு ஒரு காரணம் | மன அமைதிக்கும் ஒரு காரணமாக அமைந்துள்ளது |

## கல்வித்தேடலின் ஆரம்பத்திலேயே இம்மூல நூலை கற்பதற்கு தேர்வு செய்வதற்கான காரணம்

எமது சிறந்த முன்னோர்களும் அஹ்லுஸ்ஸுன்னா வல்ஜமாஆவை சேர்ந்த எமது உலமாக்களும் ப(b)ரகத்தான இந்த மூல நூலின் விடயத்தில் கவனம் செலுத்தியுள்ளார்கள். அதற்கு காரணம் மகத்தான பயன்கள் அதில் காணப்படுவதேயாகும். அப்பயன்கள் இந்த நூலை ஒரு அடித்தளமாக மாற்றிவிட்டன. அறிவை தேடும் மாணவன் அதிலிருந்து ஆரம்பித்துச் சென்று, அதன் மீது தனது மார்க்க அறிவைக் கட்டி எழுப்புவான். எனவே, இந்த வழிமுறையில் நாமும் அவர்களை பின்பற்றி, அவர்களின் அடிச்சுவட்டில் நடக்கின்றோம்.

## তিনটি মূলনীতি ও তার প্রমাণপঞ্জি
## এবং
## চারটি নীতির ব্যাখ্যাগ্রন্থ

মূল লেখক
শাইখুল ইসলাম মুহাম্মাদ বিন আব্দুল ওয়াহহাব
(রহিমাহুল্লাহ)

ব্যাখ্যাকার :
শাইখ হাইছাম বিন মুহাম্মাদ জামিন সারহান
শিক্ষক: মা'হাদুল হারাম,মাসজিদ নাববী, মাদীনা

বাংলা ভাষান্তর :
কাওসার এরশাদ
অধ্যায়নরত
মাদানী ইসলামী বিশ্ববিদ্যালয়

## شرح
## ثلاثة الأصول وأدلتها
## والقواعد الأربع

لإمام الدعوة الشيخ
محمد بن عبد الوهاب بن سليمان التميمي
رحمه الله وأسكنه فسيح جناته

شرح فضيلة الشيخ
هيثم بن محمد جميل سرحان
المدرس بمعهد الحرم بالمسجد النبوي سابقًا
المشرف على موقع التأصيل العلمي
http://attasseel-alelmi.com
غفر الله له ولوالديه
ولمن أعانه على إخراج هذا الكتاب

## Makalah Akidah dan Tauhid

**Penyusun:**
**Syaikh Haitsam bin Muhammad Jamil Sarhan**
**Pengajar di Ma'had al Haram Masjid Nabawi**



**Penerjemah :**
**Ahmad Laode, Lc**
**Wakaf di Jalan Allah ta'ala**

www.attasseel-alelmi.com

Libri i
## Teuhidit dhe Akides

Shejkhu i nderuar:
**Hejthem Serhan**




| | |
|---|---|
| Tri parimet | الأصول الثلاثة |
| Katër rregullat | القواعد الأربع |
| Mësime të rëndësishme | الدروس المهمة |

Mblodhi dhe përktheu:
**Firdeus Ilir Çorja**

www.attasseel-alelmi.com



IMAM ABU AL-HUSAYN MUHAMMED IBN ABDI AL-WAHHAB, IBN SULAYMEN TAMIMMI
Gratuit
CELE TREI PRINCIPII FUNDAMENTALE
ترجمة شرح الأصول الثلاثة للشيخ هيثم سرحان حفظه الله باللغة الرومانيّة
Explicarea Celor Trei Principii Fundamentale de către
Sheikh Haytem bin Muhammed Jamil Sarhan
fost profesor la școala de la Masjid Al Nabawi
www.attasseel-alelmi.com
وقف لله للتوزيع المجّاني




وقف برای الله تعالی
فروش جایز نیست
مترجمة
باللغة الفارسية
شرح سوال‌های سه‌گانه قبر
قواعد چهارگانه
نواقض اسلام
درس‌های مهم برای عموم امت
شرح دهنده شیخ
هیثم بن محمد جمیل سرحان
مدرس سابق دانشکده حرم مسجد نبوی




شرح ثلاثة الأصول والقواعد الأربع
والدروس المهمة لعامة الأمة
باللغة الروسية
РАЗЪЯСНЕНИЕ ПОСЛАНИЙ
«ТРИ ОСНОВЫ»
«ЧЕТЫРЕ ПРАВИЛА»
«ВАЖНЫЕ УРОКИ ДЛЯ ВСЕЙ МУСУЛЬМАНСКОЙ ОБЩИНЫ»
ШЕЙХ ХЕЙСАМ ИБН МУХАММАД ДЖАМИЛЬ САРХАН
Да сохранит его Аллах
ВАКУФНОЕ ИМУЩЕСТВО
НЕ ДЛЯ ПРОДАЖИ
1437 г. х. (2016 г.)




وقف لله وللتوزيع المجاني
FREE DISTRIBUTION ONLY
مُذَكِّرَة
في علم العقيدة والفقه والسيرة والتفسير
GATEWAY TO UNDERSTANDING AQĪDAH, FIQH, SĪRAH & TAFSĪR
Shaykh
Haytham ibn Muḥammad Sarḥān
TEACHER IN AL-MASJID AN-NABAWĪ, PROPHETIC CITY OF MEDINA
Compiled by
Abul Abbaas Naveed Ayaaz
GRADUATE FROM THE ISLĀMIC UNIVERSITY OF MEDINA
النشاطات السلفية ببريطانيا
SalafiEventsUK


وقف لله تعالى
INTERDIT A LA VENTE
اللغة الفرنسية
LE FRANÇAIS
L'EXPLICATION DES
TROIS QUESTIONS
DE LA TOMBE
شرح أسئلة القبر الثلاثة
Suivi de
L'EXPLICATION
DES QUATRE REGLES
شرح القواعد الأربع
Cheikh Haytham Mohammad Jamil Sarhan
لفضيلة الشيخ : هيثم محمد جميل سرحان


La spiegazione di
"I Tre Fondamenti e le
loro p
Shaykh Haytham Sarĥān
A suffragio di `Abdi Llāh Ibn Khālid Al Haīl,
che Iddio abbia di lui misericordia.
Copia gratuita, non è consentita la vendita.
في ثواب عبدالله بن خالد الهيل" رحمه الله تعالى"


مُتُونُ
طَالِبِ الْعِلْمِ
اعتنى بها فريق موقع التفريغ
http:// www.attafreegh.com
بإشراف فضيلة الشيخ
هيثم بن محمد جميل سرحان حفظه الله


De Tre Grunderna
Shaykh-ul-Islam Mohammed Ibn Abdil-
Wahhab (d. 1206 H)
&
Viktiga Lektioner för den
Muslimska Nationen
al-Imam Abdul Aziz Ibn Abdillah Ibn Baz
(d. 1420 H)
I Allahs namn, Den Nådrike, Den
Benådande

## তিনটি মূলনীতি ও তার প্রমাণপঞ্জি এবং চারটি নীতির ব্যাখ্যাগ্রন্থ

মূল লেখক
শাইখুল ইসলাম মুহাম্মাদ বিন আব্দুল ওয়াহহাব
(রহিমাহুল্লাহ)

ব্যাখ্যাকার :
শাইখ হাইছাম বিন মুহাম্মাদ জামিন সারহান
শিক্ষক: মা'হাদুল হারাম,মাসজিদ নাববী, মাদীনা

বাংলা ভাষান্তর :
কাওসার এরশাদ
অধ্যায়নরত
মাদানী ইসলামী বিশ্ববিদ্যালয়

## شرح ثلاثة الأصول وأدلتها والقواعد الأربع

لإمام الدعوة الشيخ
محمد بن عبد الوهاب بن سليمان التميمي
رحمه الله وأسكنه فسيح جناته

شرح فضيلة الشيخ
هيثم بن محمد جميل سرحان
المدرس بمعهد الحرم بالمسجد النبوي سابقًا
المشرف على موقع التأصيل العلمي
http://attasseel-alelmi.com
غفر الله له ولوالديه
ولمن أعانه على إخراج هذا الكتاب

## Makalah Akidah dan Tauhid

Penyusun:
Syaikh Haitsam bin Muhammad Jamil Sarhan
Pengajar di Ma'had al Haram Masjid Nabawi



Penerjemah :
Ahmad Laode, Lc
Wakaf di Jalan Allah ta'ala

www.attasseel-alelmi.com

## Libri i Teuhidit dhe Akides

Shejkhu i nderuar:
Hejthem Serhan




Tri parimet — الأصول الثلاثة
Katër rregullat — القواعد الأربع
Mësime të rëndësishme — الدروس المهمة

Mblodhi dhe përktheu:
Firdeus Ilir Çorja

www.attasseel-alelmi.com


IMAM ABU AL-HUSAYN MUHAMMED IBN ABDI AL-WAHHAB, IBN SULAYMEN TAMIMMI
Gratuit
CELE TREI PRINCIPII FUNDAMENTALE
ترجمة شرح الأصول الثلاثة للشيخ هيثم سرحان حفظه الله
باللغة الرومانيّة
Explicarea Celor Trei Principii Fundamentale de către
Sheikh Haytem bin Muhammed Jamil Sarhan
fost profesor la școala de la Masjid Al Nabawi
www.attasseel-alelmi.com
وقف لله للتوزيع المجّاني


وقف برای الله تعالی
فروش جایز نیست
مترجمة
باللغة الفارسية
شرح سوال‌های
سه‌گانه قبر
قواعد چهارگانه
نواقض اسلام
درس‌های مهم برای عموم امت
شرح دهنده شیخ
هیثم بن محمد جمیل سرحان
مدرس سابق دانشکده حرم مسجد نبوی


شرح ثلاثة الأصول والقواعد الأربع
والدروس المهمة لعامة الأمة
باللغة الروسية
РАЗЪЯСНЕНИЕ ПОСЛАНИЙ
«ТРИ ОСНОВЫ»
«ЧЕТЫРЕ ПРАВИЛА»
«ВАЖНЫЕ УРОКИ ДЛЯ ВСЕЙ МУСУЛЬМАНСКОЙ ОБЩИНЫ»
ШЕЙХ ХЕЙСАМ ИБН МУХАММАД ДЖАМИЛЬ САРХАН
Да сохранит его Аллах
ВАКУФНОЕ ИМУЩЕСТВО
НЕ ДЛЯ ПРОДАЖИ
1437 г. х. (2016 г.)


وقف لله وللتوزيع المجاني
FREE DISTRIBUTION ONLY
مُذَكِّرة
في علم العقيدة والفقه والسيرة والتفسير
GATEWAY TO UNDERSTANDING AQĪDAH, FIQH, SĪRAH & TAFSĪR
Shaykh
Haytham ibn Muḥammad Sarḥān
TEACHER IN AL-MASJID AN-NABAWĪ, PROPHETIC CITY OF MEDINA
Compiled by
Abul Abbaas Naveed Ayaaz
GRADUATE FROM THE ISLĀMIC UNIVERSITY OF MEDINA
النشاطات السلفية ببريطانيا
SalafiEventsUK